மந்திரப்புனலார்குடத்தினீரெடுத்துமாந்தினன்மாந்தியபின்னர்
அந்தணரறிந்தாங்கரசவுன்வயிற்றிலருமகவுதிக்குமென்றறைந்தார்

வேட்டு - விரும்பி, தள்ளிரவு - நடுராத்திரி. (௧௩)

அரசனுமிறவாவண்ணமாலருளாலன்னவனகடுகீண்டெழுந்தான்
இருமுலைப்பாலுக்கேக்கறுவண்ணமிந்திரன்மகிழ்வொடுமாங்கு
மருவிமாந்தாதாவெனும்பெயர்வழங்கிமணிவிரலாலமுதளிப்ப
ஒருதினத்துலகமுவப்புறவளர்ந்ததொள்ளொளிதழைந்தபைங்குழவி.

அகடுகீண்டு - வயிற்றைக்கிழித்து. (௧௪)

வந்தெழுமாந்தாதாவெனும்பெயரோன்வையகம்பொதுவறப்புரந்து
விந்தைசேர்புயத்தானெனுஞ்சசிவிந்தின்வீறுசான்மகள்விந்துமதியைக்
கொந்தவிழலங்கல்சூட்டினன்வேட்டுக்குலவெழின்மைந்தர்மூவரையும்
செந்தளிருருவத்தைம்பதெண்ணினராஞ்சேயிழையாரையுமளித்தான்.

புரந்து - காத்து. (௧௫)

ஐம்பதுமகளிர்தம்மையுந்தவஞ்செயந்தணன்சவுபரிவேட்டான்
என்பதைவிரிக்கின்யமுனைமாநதியினிரும்புனன்மூழ்கினனெடுநாள்
மன்பெருந்தவஞ்செய்காலையம்முனிவன்வயங்குமீனினங்களோர்கடும்பாய்
முன்பொருந்துதல்கண்டன்னவாறுறையமுன்னினனரசன்மாட்டடைந்தான்.

கடும்பு - உறவு. (௧௬)

கலிவிருத்தம்.

அரசன்முன்னமருந்தவனெய்திநீ
உரைசெயுந்தவப்பேற்றினுயிர்த்தநல்
திருவன்னாரிலோர்சேயிழைமங்கையைத்
தருதியென்னவவ்வேந்தனுஞ்சாற்றுவான்.

தவப்பேற்றின் உயிர்த்த - தவப்பயனாற்பெற்ற. (௧௭)

பெற்றகன்னியர்பெட்புறுவாரெனின்
மற்றவர்க்குமணத்தின்வழங்குதல்
கொற்றமன்னர்குலத்தொழிலென்றனன்
உற்றவனுருவின்மையுணர்ந்தரோ.

பெட்புறுவாரெனின் - விரும்புவராயின். (௧௮)

சொல்லக்கேட்டசவுபரிதோன்றலே
நல்லைநீதிநவின்றனைகன்னியர்
வல்லையேவரனென்னவரித்திடின்
ஒல்லுமோநினக்கீவதுரையென்றான்.

வரன் - நாயகன். (௧௯)

என்றலுந்தவத்தோனையவ்வேழையர்
ஒன்றுகின்றவுறையுளினுய்த்தவர்

நன்றுரைத்ததிறனவிலென்றுமுன்
நின்றகஞ்சுகியோடுநிகழ்த்தினான்.

கஞ்சுகி — சேவகன். (உ

அரசுரைத்தவவ்வாறவன்சென்றனன்
மருவுமிவ்வுருமாண்பிலதென்றுவிட்
டிரதிகாந்தனுமேக்கறவின்னெழில்
உருவுகொண்டவனுற்றனனொண்டவன்.

இரதிகாந்தன் - மன்மதன். (உக)

மங்கைமாரொடுமன்னன்விடுத்தது
செங்கைவேத்திரன்செப்பலுமன்னவர்
இங்குவேளெழுந்தேயினனேவெனத்
துங்கமாதவத்தோன்றலைச்சூழ்ந்தனர்.

செங்கைவேத்திரன் - சேவகன். (உஉ)

வந்துமொய்த்தமடந்தையர்மாலையிச்
சுந்தரற்குநான்சூட்டுவன்சூட்டுவன்
முந்தவென்னமொழிந்தனர்மொய்த்தனர்
அந்தவாறரசற்குரைத்தானவன்.

மொய்த்த - நெருங்கின. (உ௩)

கேட்டலோடுங்கிளர்ந்தமுனிவனை
வேட்டவைம்பதுமெல்லியலாரையும்
வாட்டநீங்கியமாதவன்காலினீர்
ஆட்டிநல்கினனன்புடைவேந்தனே.

வேட்ட - விரும்பின. (உ௪)

மணஞ்செய்மங்கையர்தம்மொடம்மாதவன்
கணஞ்செய்மாமணியாற்கனகத்தினால்
நிணஞ்செய்வேன்மயனெஞ்சினியற்றிய
குணஞ்செய்மாடங்குடிபுகுந்தானரோ.

மயன் - தெய்வக்கம்மியன், நெஞ்சினியற்றிய - மனத்தாற்சிருஷ்டித்த. (உ௫)

இல்லின்வாழ்க்கைக்கியைந்திடும்பல்பொருள்
ஒல்லைவந்துறவைம்பதுருக்கொடு
சொல்லுமாதவன்றோகையர்தம்மொடும்
புல்லியன்புபொருந்தினன்வைகுநாள்.

ஒல்லை - விரைவாக.

மடந்தைமாரைவனத்திலம்மாதவ
ரொடார்ந்துபோமெனச்சொல்லினனன்னவர்

நடந்தவாறெவனுமேவனென்றெழுந்
தடைந்தனன்மகவாசையின்மன்னவன்.

மகவாசையின் - மகனாசையால். (௨௭)

உற்றமாதருவப்பினிறைஞ்சியந்
நற்றவன்செயல்யாவுநவின்றனர்
அற்றமின்றியகமகிழ்ந்தோங்கவக்
கொற்றமன்னவன்கொண்டனனற்புதம்.

அற்றம் - முடிவு. (௨அ)

மைந்தரோடுமகளிர்கடம்மொடும்
அந்தமைந்தரளித்தவர்தம்மொடும்
பந்தமோடுஞ்சவுபரிபல்பகல்
நந்தலின்மகிழ்கூர்ந்தவணண்ணினன்.

பந்தமோடும் - சுற்றததாரோடும். (௨௯)

எருசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

இன்னணங்காமநுகர்ந்தவனிவைமுன்யமுனையின்மீற்றிரளென்ன
மன்னுதற்சங்கத்துற்றவென்றொழித்துவனத்திடைத்துனைந்துபோய்மாயோன்
தன்னைநன்குணர்ந்துதவம்பலவாற்றித்தணப்பிலாமுத்திசென்றடைந்தான்
பன்னியர்தாமும்வனத்திடைப்படர்ந்துபாமவீடெய்தினர்மாதோ.

மீற்றிரள் - மீன்கூட்டம், துனைந்து - விரைந்து. (௩0)

இக்குவாகுவின் கதையுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—௬௬

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.

---

ஐந்தாவது

## அரிச்சந்திரன் கதையுரைத்த வத்தியாயம்



அறைதருமாந்தாதா னமுயிர்த்தோனம்பரீடன்புருகுச்சன்
நெறியுறுபுகழ்சார்தருமுசுகுந்தனிகழ்த்துமிம்மூவரின்முன்னோற்
குறைவறுகுணஞ்சாலொருமகவென்னக்குலவியபிதாமகனுகும்
முறைமையின்யுவனுச்சுவனெனுநாமன்மூதுலகிற்பெறீஇச்சிறந்தான்.

நாமன் - பெயருள்ளவன்.

அழகுறும்யுவனுச்சுவனெனும்பெயரானரிதனையளித்தனனரிதன்
விழைவொடுமாரிதன்றனையுயிர்த்தான்விளம்பியபுருகுச்சனென்போன்
பொழிகதிர்மணிசூழ்பாதலங்குறுகிப்புயங்கவேந்தரைநனிசினக்கும்
ஒழிவறுபகைஞர்யாரையுமொறுத்தானுரகருமுளமுவந்தனரால்.

புயங்கவேந்தர் - நாகராஜர்.

உரகருத்தம்மினுடன்பிறந்தவளாமொருநருமதைதனையளிப்ப
விரிமலர்த்தொடையலரசனுமணந்துவிளங்குதன்பெயர்மொழிந்தவர்க்கும்
அரவினின்வெருவுளடைந்திடாவரமுமடைந்துலகொருகுடைநிழற்றித்
தரியலர்புகழுந்திரசதசியனுந்தயனையுயிர்த்தனனன்றே.

தரியலர் - பகைவர். (௫)

பற்றலர்பரவுங்கொற்றமேலன்னோன்பரவுகுச்சன்றனையுயிர்த்தான்
முற்றிழைமகளிர்முகமெனமுளரிமுகைமுறுக்கவிழ்ந்திதழ்விரிக்கும்
அற்றமில்வளஞ்சான்மருதவைப்புடுத்தவயோத்திநாடாளுமவ்வண்ணல்
வெற்றிசேராரண்ணியனெனவிளம்பும்வேந்தனையளித்தனனன்றே.

பற்றலர் - பகைவர். (௬)

தசமுகன்றன்னுற்சமர்க்களத்திறந்ததருக்காரண்ணியன்றநயன்
வசையறுமரியச்சுவனவன்மதலைவாழ்தருமருணன்மற்றவன்சேய்
திசைபுகழ்திரிபந்தனனவன்சிறுவன்றிகழ்திரிசங்குவின்தாதை
விசயம்வந்தேத்திவிரும்பலர்வணங்கவிளங்குவேற்சத்தியவிரதன்

சமர்க்களம் - போர்க்களம்.

சத்தியவிரதன்யேய்திரிசங்குசதுமறைவசிட்டனுற்கான்போய்ச்
சித்தநொந்திகழும்பூரியனுகிச்செய்தவக்கோசிகனருளால்
கொத்தலர்பசும்பொற்றருநிழல்குறுகக்குறுகலென்றமராங்கொழிப்ப
வித்தகவீழுங்காலையம்முனிவன்விண்மிசைநிறுவினன்வெகுண்டான்

பூரியன் - நீசன். (௮)

கோசிகனருளாலின்னமும்விண்மேற்குலவுதல்யாவருங்காணத்
தேசொடுமுலவுகின்றனனன்னோன்சேயரிச்சந்திரனுமால்
ஆசறுமன்னோனிமித்தமாய்முன்னமருந்தவமுனிவசிட்டனுக்கும்
மாசில்கோசிகற்கும்வந்ததுசீற்றம்வானவருளமதிசயிப்ப

சீற்றம் - கோவம். (௭)

கலிநிலைத்துறை

ஆடல்வேலரிச்சந்திரனென்றுசொலாசன்
வாடியேமகவில்லனுய்வைகுமந்நாள்வாய்
நாடியாழிசைநவிற்றுநாரதனண்ணிப்
பாடுவார்புனற்கிறையைநீபணிகெனப்பணித்தான்.

புனற்கிறை - வருணன். (௮)

வருணன்வந்தொருமைந்தனைவழங்குவன்வழங்கும்
பாருவின்மைந்தனற்பசுவெனமகம்புரிவாய்கொல்
ரசவென்றவனியையந்தபின்னருள்புரிந்தகன்றுன்
றைசெய்வண்ணமவ்வேந்தனுமொருமகவுயிர்த்தான்.

மகம் - யாகம்.

சகமுவப்புறத்தங்கியங்குதித்தசேய்தனக்குப்
புகழ்சிறப்புறரோகிதனெனப்பெயர்புரிந்தான்
மகம்விளைந்துசெய்மகவொருபசுவெனவருணன்
அகமகிழ்ந்துவந்துரைசெயவரசனுமறைவான்.

சகம் - உலகம். (௧0)

சிறுவனின்னமுந்தெரிதரமழலையஞ்செவ்வாய்
றுறுவரேற்றிலன்மொழிந்திடிற்பன்முளைத்திலதால்
றுகிலப்பசுப்புனிதமாங்குணமுறுதென்றான்
எறிதடந்திரைப்புனற்கிறையேகினனிசைந்தே.

முறுவல் - சிரிப்பு. (௧௧)

முத்தமாமெனமூரல்செவ்வாய்முளைத்ததற்பின்
தத்துநீர்க்கிறைமகம்புரிவாயெனச்சாற்ற
மத்தயானையம்மன்னனம்மைந்தனுக்கின்னம்
பத்தியாகநன்குருத்திலபல்விழுந்தென்றான்'

மூரல் - பல். (௧௨)

உந்துநீர்க்கிறைமகஞ்செய்முன்னுரைத்தவாறென்று
வந்தபோழ்தெலாமிவ்வகைமன்னவன்சேய்பால்
சிந்தைகூரும்வேணவாவினூற்செப்பினன்சிறுவன்
அந்தவாறறிந்தேகினனடவியினடைந்தான்.

நீர்க்கிறை - வருணன். (௧௩)

வனத்துமைந்தனுநடந்தனன்றவஞ்செய்வான்மனத்து
நினைத்துமன்னவனுரைத்தனனன்றுநீர்க்கிறையோன்
சினத்துமற்றவனகட்டிடைச்செழும்புனனிறைப்பக்
கனத்திருந்ததுமகோதரப்பெயர்கதுவினனால்.

அகட்டிடை - வயிற்றில். (௧௪)

காட்டினூற்றபின்கான்முளைசில்பகல்கழித்து
வாட்டமுற்றரிச்சந்திரன்வருந்துதல்கேளா
வீட்டியுற்றவெம்பிணிதணிக்கினுமிகநன்று
நாட்டினூற்றவற்காண்குவல்யானெனநடந்தான்.

கேளா - கேட்டு. (௧௫)

தாதைபாற்செலுந்தயனையிந்திரன்றகையாப்
பூதலத்திடைப்புனிதநீர்படிகுதிபடிந்தால்
ஏதநீங்கிநீவிழைந்தனவெய்துதியென்றான்
காதன்மைந்தனுமன்னவாபுரிந்துசெல்காலை

தநயனை - பிள்ளையை (௧௬)

உரைசெய்நான்மறையிரிசிகனுயிர்த்தமைந்தர்களில்
அரியசீர்நடுமைந்தனையரும்பொருள்கொடுத்து

விரைவினிற்கொடுதாதைமுன்விடுத்தனன்றாதை
புருடமேதமங்கியற்றினன்போக்கினன்பிணியே

புருடமேதம் - நரமேதயாகம்.

மகமியற்றுழிமாதவக்கோசிகனோதா
பகையடக்கியசாமகன்பகர்தருவசிட்டன்
சகம்வழுத்துமத்துவரியுபிருகுவர்ந்தவத்தோன்
புகழ்படைக்குமெய்ச்சமதங்கிபிரமனாப்புகல்வார்.

கோசிகன் - விசுவாமித்திரன்.

வருணன்வெம்பிணிதீர்த்தனன்வழங்கினனாசுச்
செரிபசும்பொலந்தேர்மகிழ்ந்திரனீந்தான்
புரிமகத்தினிற்பசுவெனப்புகுஞ்சுனச்சேனன்
சரிதநல்லதுபின்னதுசாற்றுவன்றவத்தோன்

பொலந்தேர் - பொற்றேர்.

ஆழிசூழ்புவிபுகழரிச்சந்திரனணியார்
எழிரும்பொழில்காக்கெனமைந்தனையிருத்தித்
தாழிருஞ்சடைக்கோசிகன்சாற்றுபோதத்தால்
ஊழிணைமுடிதத்துவமொழித்துவீடுற்றான்.

போதத்தால் - ஞானத்தால்.

அரிச்சந்திரன் கதையுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—௧௧௯

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.

---

## ஆறாவது

## சகரன் கதையுரைத்த வத்தியாயம்.

### கலிவிருத்தம்.

அண்ணலரிச்சந்திரனளித்தமதியென்ன
ஒண்ணிழல்பரப்புகுடைரோகிதனுயிர்த்தான்
வண்ணவரைமார்பனரிதன்றனையவன்றார்
தண்ணறைதுளிப்பவருசம்பனையளித்தான்.

உயிர்த்தான் - பெற்றான்.

சம்பனெனுமன்னவனளித்ததநயன்சீர்
அம்புவிபரித்திடுசுதேவனவன்மைந்தன்
கம்பமதமாவிசயனென்பர்கலைவல்லோர்
உம்பர்புகழ்மன்னவனுயிர்த்தபுதல்வன்றான்.

பரித்திடு - தாங்குகிற.

ரூருகனெனப்புகல்வர்ரூருகனுயிர்த்தோன்
வீரநெடுவேல்விருகன்வேள்விருகனென்பான்
வாரிதிநிலம்புகழும்வாருகனவென்றான்
சேரலர்வெருட்டனனிசென்றனன்வனத்தே.

ரூருகன் - ருருகன், சேரலர் - பகைவர். (௩)

ஆங்குறையவூருவன்றனுச்சிரமமேவித்
தீங்கறநற்றேவியொடுசெல்பகல்கழித்து
வாங்குசிலைவேளனையவாருகனிறந்தான்
ஏங்கிமனையாளுமழலெய்தநினைவுற்றாள்.

வேள் - மன்மதன். (௪)

தீயின்விழவேகுமவள்செவ்விமுகனோக்கி
மாயும்வகையெண்ணியொருமாற்றவளருத்த
மேயவிடமோடுதிகழ்மெல்லியலகட்டின்
ஏயதொருபைங்குழவியிவ்வுலகளிப்பான்.

செவ்வி - அழகு. (௫)

நேரிழையிதென்கொனினைவுற்றனைநீயென்றவ்
வாரியனெனும்புகழவூருவன்விலக்க
வீரியவிடத்தினொடுமேதினிவியப்பச்
சீரியமடந்தையொருசெல்வனையுயிர்த்தாள்.

மேதினி - உலகம். (௬)

ஓர்கொடுவிடத்தினொடுதித்தவகைதன்னால்
பேர்சகரனென்றுபுவிபேசவெழிலுற்றிப்
பார்முழுதுமோர்குடைபரப்புநிழன்மன்னன்
போர்புரியுமொன்னலர்கள்பொன்றிடவுடன்றான்

ஒன்னலர்கள்பொன்றிட - பகைவர் இறக்க. (௭)

ஒன்னலரைவீட்டுதலொழிந்தருள்செய்கென்று
பன்னுகுருநன்மொழிபகர்ந்திடவும்மன்னன்
மன்னுபகைவீர்குறிமணந்திரியுமென்றான்
சென்னிமயிர்மாத்திரமேநீங்குறவொழித்தும்.

வீட்டுதல் — கொல்லுதல்.

சுற்றமொடுநக்கினரெனத்துகிலொழித்தும்
கொற்றமின்மிலேச்சரெனவேகொடியர்போயார்
வெற்றிபுரிமன்னவனுமேதினிபுரந்து
நற்றவரொடும்புரவிநன்மகமிழைத்தான்

நக்கினர் - நிர்வாணர்.

அப்புரவியிந்திரனடைந்துகொடுபோகிச்
செப்புகபிலப்பெயர்சிறந்தமுனிபால்விட்

டொப்பறு துறக்கநகருற்றவனுவந்தான்
எப்பதிநடந்ததயமென்றரசர்நாட. (௪0)

அயம் - குதிரை.

வேறு.

அறுபதினுயிரரசன்காதலர்
எறிதிரைசூழ்புவியெங்குநேடினர்
மறுவறுவேள்வியின்வாசிகண்டிலர்
நிறைகடலிதுவெனநிலந்தொட்டுண்டனர்.

வாசி - குதிரை.

தோண்டினர்நிலத்தினைத்துருவிப்பாதலத்
தீண்டினர்வடகிழக்கிருந்தமுத்தனை
மாண்டமாதவத்தினர்மாயனென்னவே
காண்டகுமுனிவனைக்கண்ணுற்றாரரோ,

துருவி - தேடி.

கண்டனர்கவினமாக்கபிலன்மாட்டுங்
கொண்டனையோவெனக்கொடியவெவ்வுரை
விண்டனர்முனிவரன்வெகுளித்தீயையும்
உண்டனர்நீறெனுமுடலமுற்றனர்.

கவினமா - கடிவாளம்பூட்டின குதிரை.

உற்றது தூதரினுணர்ந்துமன்னவன்
அற்றமில்புகழ்தருமஞ்சுமானெனப்
பெற்றிடும்பெயரொருபேரன்றன்னை நீ
கொற்றவெம்பரியிவட்கொணர்கென்றேதினன்.

அற்றமில் - முடிவில்லாத.

என்னலுமன்னவனெழுந்தவ்வேந்தலை
முன்னுயிர்த்தவன்றிறமொழிதியென்றலும்
மன்னவனுளங்கொளவழங்கினன்றவம்
துன்னியமுனிவரன்சுகனென்பானரோ.

உயிர்த்தவன் — பெற்றவன்.

சகரனென்றுரைதருதாமவேலினன்
துகளறுமெழிற்சுகேசினியைத்தோய்ந்துபார்
இகழசமஞ்சதனென்னுமேந்தலை
மகவெனவுயிர்த்தனன்மகிழ்ந்துமுன்னமே.

துகள் - குற்றம், தோய்ந்து - கூடி.

அன்னவனஞ்சுமானுயவண்ணலை
உன்னியமகவெனவுயிர்த்துவைகுநாள்

முன்னுறுபிறவியின் முயன்றயோகத்தால்
துன்னியகான்செலத்துணிந்தமன்னவன்.

கான்செல — காட்டுக்குப்போக. (௧௭)

தாதைதன்னருளினுன்வனத்திற்சார்வதிங்
கோதியவறனெனவுடன்சென்மைந்தரைத்
தீதகல்சரயுவிற்செலுத்திமாய்த்தனன்
பேதைமையோனெனயாரும்பேசவே.

சரயு - சரயுநதி. (௧௮)

எய்தினர்சகரன்மாட்டெவருநின்மகன்
செய்திறங்கேட்கெனப்பொருமிச்செப்பலும்
வைதனன்மைந்தனேவனத்துப்போக்கினன்
பொய்தபுகாட்சியன்போகுமெல்லையின்.

பொருமி - அழுது, எல்லை - சமயம். (௧௯)

தாவிலாச்சரயுவின்றன்னின்வீடினர்
ஆவிபெற்றெழுந்திடவருளிப்போயினுன்
காவலனுய்ந்தவர்க்கண்டுகான்புக
ஏவினனெனத்துயரெய்திவைகினுன்

வீடினர் - இறந்தவர். (௨0)

அத்தகைமன்னவனளித்தவஞ்சுமான்
தத்தொளிப்பூணினுன்சகரனேவலால்
மத்தவெங்கரியெனநடந்துவாம்பரி
உத்தமகபிலன்மாட்டுறைதனேக்கினுன்.

அளித்த - பெற்ற. (௨௧)

நீங்கருமுனிவரன்வெகுளித்தீயினுல்
ஆங்கெரியுறுமுடலடலைநோக்கினுன்
ஏங்கினன்கபிலனையிறைஞ்சியேத்தினன்
நீங்கருநெடுந்தவனிகழ்த்தினுனரோ.

வெகுளி - கோவம், அடலை - சாம்பல். (௨௨)

வரநதியிவணுறின்மாய்ந்தமன்னவர்
திருவுறுபொன்னகர்சென்றுசேர்குவர்
குரகதம்வேள்வியிற்கொண்டுபோகெனப்
பரியொடவ்வேந்தனும்பதிபுக்கானரோ.

வரநதி - ஆகாயகங்கை. (௨௩)

அண்ணலஞ்சகரனப்புரவியுற்றபின்
விண்ணவர்மகிழ்தரவேள்விமுற்றினுன்
நண்ணினன்வனத்திடைநலஞ்செயஞ்சுமான்
கண்ணகன்புவியெலாங்காப்பநல்கியே.

புரவி - குதிரை. (௨௪)

சகரன் கதையுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—௧௪0.

ஏழாவது.

## பகீரதன் கதையுரைத்த வத்தியாயம்.



வேறு.

மஞ்சுமான்மகத்துய்த்திடுமன்னவன்
மஞ்சுமானுமலரைந்தருவுகின்
றஞ்சுமாநல்குமங்கையினுன்புகழ்
அஞ்சுமானரசாட்சியின்வைகுநாள்.

மஞ்சு - மேகம், அஞ்சுமா - அஞ்சுமாறு.

ஒழிந்ததாதையர்கற்பகநாடுற
வொழிந்துகங்கைவந்தெய்துதற்காந்தவம்
அழிந்தசிந்தையனுற்றவங்குற்றிலன்
தழைந்தவெண்டிரைத்தண்புனற்கங்கையாள்

கற்பகநாடு - சுவர்க்கலோகம். (உ)

அஞ்சுமானெனுமண்ணலளித்தசேய்
செஞ்சொனுவலரேத்துதிலீபனும்
கஞ்சநாண்மலர்க்கண்ணினன்றூடரும்
தஞ்சமாநதிநோக்கித்தவஞ்செய்தான்.

கஞ்சநாண்மலர்க்கண்ணினன் - திருமால். (ங)

விழையுமாநதிமெய்த்தவஞ்செய்தவன்
தொழுதுபோற்றலுந்துன்னியதில்லையால்
மொழியும்வேந்தனுயிர்த்தனன்முன்னுவோர்
பழுதுநீக்குபகீரதன்றன்னையே.

உயிர்த்தனன் - பெற்றான். (ச)

பாரளிக்கும்பகீரதன்பல்பகல்
ஏரளிக்குந்தவநன்கியற்றலும்
தாரளிக்கும்பவன்செஞ்சடைவழி
சீரளிக்குந்திருநதிசேர்ந்ததால்.

பவன் - சிவன்.

சேர்ந்துமன்னவன்றேர்முனஞ்செல்வழி
ஊர்ந்துபாதலத்துற்றுப்படிதலும்
போர்ந்துமாமுனிபுங்கவன்சீறலால்
வீந்தவேந்தர்கள்விண்ணடைந்தார்களே.

வீந்த - இறந்த. (ரு)

# பகீரதன் கதையுரைத்த வத்தியாயம்.

எண்ணின்விடருளெம்பெருமான்றூழாய்க்
கண்ணியான்பதங்கான்றெழுகங்கையாள்
நண்ணினோர்பவந்தீர்த்துநலஞ்செயல்
மண்ணின்மேன்மதித்தோதல்வழக்கரோ.

பவம் - பாவம். (எ)

உலகந்தாயவுயரடிநின்றிழிந்
தலரின்மேலவனங்கைதவழ்ந்துபொன்
திலகவாணுதல்பங்கன்றிரள்சடை
சுலவிவீழ்ந்ததுதூநதியிங்ஙனே.

அலரின்மேலவன் - பிரமன், சுலவி - சுற்றி. (அ)

சகம்விளங்கியதண்புனற்கங்கையாள்
அகமகிழ்ந்தவன்பேர்புனைந்தாளெனின்
பகரும்பூமிபரித்தபகீரதன்
புகழையாவர்புகலவல்லார்களே.

பரித்த - தாங்கின. (கூ)

கலிநிலைத்துறை.

வரதமாநதிவையகத்தினிதுறவருந்தி
விரதமாதவம்புரிந்தவம்மன்னவன்விருப்பால்
சுருதனுகியதோன்றலோன்றினனவன்றோன்றல்
இரதமாதிநாற்றுனைநாபாவரனென்ப.

வையகத்து - உலகத்தில். (க0)

எந்தத்தீபவதீபருமேத்தருமன்னன்
இந்தத்தீவினிதோம்பநாபாவரற்றந்தான்
சந்தத்தீபமொத்திடரிருளகற்றிடுந்தருக்கார்
சிந்துத்தீபனைத்தந்தனன்செப்புமவ்வேந்தன்.

ஓம்ப - காக்க. (கக)

அரசர்போற்றயுதாயுவைபளித்தனனன்னோன்
இருதுபன்னனையேழுலகினர்தொழவீன்றான்
உரைசெயன்னவனும்புகழுடுபதியோன்றன்
மரபுளானளன்றன்னொடுநட்டுவைகினனால்.

உடுபதியோன் - சந்திரன். (கஉ)

இருக்குநாளினிற்கலிகடிந்திடுவதோர்விஞ்சை
மருக்கமழ்ந்ததார்நளனெனுமன்னனுக்குணர்த்திப்
பொருக்கெனச்செலும்புரவியினுளமறிவிஞ்சை
உரைக்குமன்னவனிசைப்பநன்குணர்ந்தனன்மாதோ.

புரவியினுளம் - அசுவ இருதயம். (கங)

இருதுபன்னனுமன்னவ்வினிதுவந்தீன்றான்
சருவகாமனேச்சாற்றுமவ்வேந்தனுந்தரைமேல்
பொருதுதுன்னலரெவரையும்வெருட்டிவண்புகழே
கருதுமானவேற்சுதாசனேக்காதலித்தளித்தான்.

துன்னலர் - பகைவர். (கச)

சுதாசனென்பவனன்பினினீன்றவத்தோன்றல்
பதாரவிந்தம்வந்திறைஞ்சவெம்பகையெனுமிருளுக்
குதாசனன்றனைநிகர்தருமானவேலுழவன்
மதாசலத்தினன்மித்திரசகனெனுமன்னன்.

மதாசலத்தினன் - மதமலையினையுடையவன், மதமலை - யானை

உரைத்தமன்னவனுவரிசூழுலகொருபுயத்தின்
பரித்துவண்டினங்காமரம்பாடிமட்டருந்த
விரித்தகிங்கிணிவாய்மலர்வேரியந்தொடையல்
தரித்தநல்லெழின்மதயந்திதனேமணந்துவந்தான்.

உவரி - கடல், மட்டு - தேன். (கரு)

வேறு.

என்மாடமோங்கவெழிலோங்குமயோத்திநாடன்
நன்மாடுபெற்றுநவைதீர்தரநண்ணுநாளின்
சொன்மாடிருந்தகுருசாபந்தொடர்தலானே
கன்மாடபாதனெனும்பேரொடுகானினுற்றான்.

நவை - குற்றம். (கஎ)

என்றாதரத்தின்முனிவேந்தனிசைத்தலோடும்
ஒன்றாதசாபமுரைசெய்ததெனுற்றவாறென்
நன்றாகநீயிங்குரையாயெனநாமவேலான்
குன்றாதஞானக்கொழுந்தாஞ்சுகன்கூறலுற்றான்.

ஆதரத்தின் - ஆசையோடு. (கஅ)

பகீரதன் கதையுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—கருஅ.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

―――

## எட்டாவது

## கன்மாட பாதன் சரித்திர முரைத்த வத்தியாயம்.



எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

வாட்டிறல்வயவரிருபுடைநெருங்கவரிசிலைமித்திரசகன்வெஃ
காட்டகத்தெழுந்துவேட்டமாடுங்காற்கடியனாமரக்கனையொறுத்தான்
வீட்டுதலறிந்தங்கிளையவல்லரக்கன்வெவ்வினைசெயநரனாகிச்
தாட்டுணைபரவியரசினுக்குணவுதருந்தொழிலினொடுஞ்சார்ந்தான்.

வேட்டமாடுங்கால் - வேட்டையாடுங்காலத்தில். (௧)

தென்புலத்தவருக்கூட்டுநாளணுகச்செழுந்தவவசிட்டனையரசன்
அன்பொடுமழைத்தங்கருத்திடுங்காலையரக்கனென்றுரைக்குமக்கொடியோன்
வன்பொடுநரூனளித்தனனளித்தோன்வஞ்சமென்றறிந்திலாமுனிவன்
என்புரிந்தனையென்றரசையிவ்வூன்றினிராக்கதனாகெனவிசைத்தான்.

நரூன் - நரமாமிசம். (௨)

மருவியமுனிவனரக்கனாங்கிழைத்தமாயமீதென்றுணர்ந்ததற்பின்
அரசயாந்தெருளாதறைந்ததோர்சாபமாண்டுபன்னிரண்டடைந்தொழிகென்
றுரைசெயக்கேட்டமன்னவன்றானுமுனக்குமிங்கரியதோர்சாபம்
விரைவின்வந்துறுமாவிளம்புவனென்னாவெகுண்டனன்புனல்கரத்தெடுத்தான்.

தெருளாது - ஆராயாமல். (௩)

மன்னநின்குலத்தினரசர்தங்குருவைவைதவருண்டுகொன்மதிக்கின்
என்னினைந்தனையென்றெழுந்தவன்மனையாளெனுமதயந்திமுன்றகைப்பத்
துன்னியெவ்விடனுமுயிரினந்துன்றுஞ்சுடுபுனல்விடுத்தலெங்கென்று
தன்னிருபதத்திற்கைப்புனல்விடுத்தான்றகைபெறுமித்திரசகனே.

தகைப்ப - தடுக்க. (௪)

கைப்புனல்விடுத்தகாலையிற்கால்கள்கருகியதிறத்தினாலெவரும்
செப்புகன்மாடபாதனென்றொருபேர்சேர்ந்தனன்சாபமுஞ்சேர்ந்து
மைப்புயல்படியுங்கானகத்தேகிவதைபுரிந்துறையுமந்நாளின்
துப்புறழ்தாமமனைவியோடின்புதுய்க்குமோர்பூசுரற்கண்டான்.

மைப்புயல் - கரியமேகம். (௫)

தரவுக்கொச்சகக் கலிப்பா.

கண்டானுள்வியப்புற்றான்கடிகுவலென்பசியையென்றான்
கொண்டானாலுவகைநனிகுறுகுமவன்முன்னனாகி
விண்டானாலுணவாகிமேவினையோநீயெனவே
தண்டாதநான்மறையோன்றன்னையிருகைப்பிடித்தான்.

உள்வியப்புற்றான் - மனத்தில் ஆச்சரியங்கொண்டான்.

விள்ளற்கரியபெருவிருப்புடையதன்பதியைத்
தள்ளற்கரியதனிவெந்தருக்குடையோன்வவ்வுதலும்

உள்ளத்துளுயிர்போக்குமுயிர்ப்பலிநீகல்கெனவே
வள்ளைப்பொலங்குழைசேர்வரிவிழியாள்வந்துரைப்பாள்.

வவ்வுதலும் - கவர்தலும். (எ)

சீரார்குலத்துதித்தசெஞ்சிலைவேந்தேகுணத்தை
ஓராதுவெஞ்சாபமொருமுனிவனோதுதலான்
போரார்வல்லரக்கனெனப்பொல்லாவிவ்வுருப்புணர்ந்தாய்
ஏராருமவ்வுருவுமெய்துவைசின்ஞள்கழித்தே.

செஞ்சிலைவேந்தே - செவ்வியவில்லையுடைய அரசனே. (அ)

நல்லாய்கேளுன்னுடையநவைதீர்நற்குலத்துதித்தோர்
வில்லாற்போர்ப்பகைகடிந்துவேதியரைக்காப்பதலால்.
பொல்லாதவிநயமதுபுரிகுநர்தாமொருவருண்டோ
சொல்லாயென்றிருவிழிநீர்சோரவவள்சொல்லினளால்.

நவைதீர் - குற்றமற்ற. (௯)

மாதுமனம்வருந்தியங்குவழங்கியசொற்கேளாமல்
ஓதவருமாமறையோனுடற்றசையுண்டென்புமிழ்ந்தான்
காதன்மனையாணெஞ்சுகலங்கியுமிழென்பையெலாம்
சோதியழலிற்சொரிந்தோருரைமொழிவாள்சோர்வுற்றே.

என்பு - எலும்பு. (௧0)

உன்னரியகொடுஞ்சாபமொழித்துனதுபதியேகின்
மன்னுமெழில்வாய்ந்தகுணமதயந்தியேமுதலாத்
துன்னவருமனையாரைத்தோய்தியெனினுயிரொழிதி
என்னமடமங்கையுமங்கிசைத்தெரியின்மூழ்கினளே.

தோய்தியெனின் - சேர்வையாயின். (௧௧)

அவ்வனத்திலிங்ஙனமாங்கமர்ந்துசிலநாள்கழிய
எவ்வமுறுகொடுஞ்சாபமிரிந்துதனிவேளெனவே
செவ்வியொடுதன்னகரஞ்சேர்ந்துமதயந்தியெழிற்
கொவ்வையிதழுண்டிடுவான்குறுகவவள்கூறினளால்.

இரிந்து - நீங்கி, வேள் - மன்மதன். (௧௨)

வண்ணமுலைநன்மடவாண்மதயந்திவிளம்புதல்கேட்
டண்ணல்வேலரசனுநன்கரிவையர்தம்போகமறந்
தெண்ணலருங்கொடியவினையேனுக்கிங்கொருமதலை
நண்ணவருள்புரிதியெனநவின்றுகுருவைத்தொழுதாள்.

அரிவையர் - மாதர், போகம் - சுகம். (௧௩)

காமநல்நுகராவுளங்காதலித்தபூசுரனைப்
பூமருவுகானகத்துப்புகுந்துகொலைசெய்ததனல்

வாமமுறுமுதுமறையோன்மனையவளுமனங்கனன்று
தீமைதருவெஞ்சாபந்தெரிந்ததிறஞ்செப்பினளால்.

காதலித்த - இச்சித்த. (கச)

இப்பார்பரிக்கவருமெழிலாருமகப்பெறற்காய்த்
துப்பாரிதழ்க்கனிவாய்த்தோமில்குணமதயந்தி
தப்பாதகற்புடையாள்சாற்றுதவவசிட்டனைச்சேர்ந்
தொப்பாருமில்லாதவொருமதலைவயிற்றடைந்தாள்.

பரிக்க - தாங்க, தோம் - குற்றம். (கரு)

வாராடுவனமுலையாள்வயிற்றில்வளர்பாலனையிங்
கோரேழ்செலும்பருவமொழிந்துமுயிர்த்தேனிலையேழ்
பாராளவென்றுள்ளம்பரிந்தொருகல்லால்வெகுண்டே
ஏரார்ந்தன்னகட்டிலெற்றினளாங்கீன்றனளே.

உயிர்த்தேனிலை - பெற்றேனில்லை, அகட்டில் - வயிற்றில். (கசு)

கல்லாலால்வயிறதுக்குக்காரிகையங்கீன்றதனால்
எல்லாருமச்சுமகனென்றழைப்பப்பெயர்புனைந்து
வில்லாலேபகைகடிந்துமேதினியோரேழ்புரந்து
மல்லாரும்புயத்தானோர்மைந்தனையுமீன்றனனே.

மேதினி - உலகம். (கஎ)

சீலமதுவழுவிலாச்செழுந்தவரவ்வேந்தனொடும்
கோலமுறுவெண்முத்தங்குலவுதிரைவாரிதிசூழ்
ஞாலமிசைமூலமெனுநன்னாளிலுதித்ததனால்
மூலகனென்றோர்நாமமொழிந்தாரம்மைந்தனுக்கே.

திரைவாரிதி - அலைகளையுடைய கடல். (கஅ)

ஏராருமூலகனென்றேத்தவருமொருபெயரான்
பாரோர்கள்புகழவருபரசுராமனுக்காய்ப்பொன்
வாரார்பூண்முலைமடவார்மறைத்தவனைவைகியதால்
நாரீகவசனென்றுநன்னாமமுற்றனனே.

பொன்வார் - பொற்கச்சு. (கக)

கலிநிலைத்துறை.

பன்னுமூலகன்றயரதற்பயந்தனன்பகர்வோன்
மன்னுசீரளபிடியெனுமைந்தனையுயிர்த்தான்
அன்னவேந்தனுமருளுடைவிச்சுவசகனும்
என்னும்வேந்தனையீன்றனன்யாவருங்களிப்ப.

பயந்தனள் - ஈன்றாள். (உ0)

கட்டுவாங்கனைவிச்சுவசகன்களித்தளித்தான்
மட்டுவார்குழன்மடந்தையர்மதனெனவழங்கும்

எட்டுமாதிரம்புகழ்கட்டுவாங்கனென்றிசைப்போன்
கிட்டிவானவருளெனக்கெழுமியங்களித்தான்

மட்டு - தேன், மாதிரம் - திசை. (௨௧)

விண்ணின்மேவியவிண்ணவர்க்கிடரறவேண்டி
எண்ணின்மாற்றலரின்றுயிர்செறச்சமரியற்றும்
அண்ணலேநினக்காயுளோர்முகூர்த்தமென்றமரர்
நண்ணியோதலுமன்னவன்றரையினண்ணினனால்

உயிர்செற - உயிரைக்கொல்ல. (௨௨)

தரையின்மேவினன்சாற்றுபோரறத்தினையறிந்தான்
உரைசெய்மால்பதமுன்னினன்முத்திசென்றுற்றான்
பொருவிலாத்திறற்கட்டுவாங்கன்றன்மெய்ப்புகழ்க்குப்
பருவமாயிரம்பகரினும்வரம்பெவர்பகர்வார்.

பதம் - திருவடி. (௨௩)

கார்க்குநேர்கொடையானெனும்புகழ்க்கட்டுவாங்கன்
தீர்க்கவாகுவென்றுரைதருசிறுவனையுயிர்த்தான்
போர்க்கவாவுதோளன்னவன்புகழ்நிலவெறித்துப்
பார்க்குவாமதிநிகர்க்குமோரிரகுவைப்பயந்தான்

கார் - மேகம், உவாமதி - பூர்ணசந்திரன். (௨௪)

திசைவிளங்கநல்லறத்தினைநிறுவியசெங்கோல்
இசைதரும்படிசெலுத்தியரகுவெனுமிறைவன்
அசனெனும்பெயரரசனையளித்தனனசனும்
தசரதன்றனைத்தந்தனன்முச்சகந்தளிர்ப்ப.

நிறுவிய - நிறுத்தின.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அன்னவனீன்றமைந்தனென்றுரைப்பவமரருக்கருடரவேண்டிக்
கன்னியந்துளவோன்றன்கலையாலுங்கலைகளின்கலைகளினாலும்
மன்னியவிராமனிலக்குவன்பரதன்வையகம்பராவுசத்துருக்கன்
என்னுமிந்நால்வராகிவந்தேழோடேழுலகாண்டனனென்றான்.

கன்னியந்துளவோன் - திருமால், கலை - அம்சம். (௨௫)

கட்வாங்கன் கதையுரைத்த வத்தியாயம் முற்றிற்று,

ஆகத்திருவிருத்தம்—௧௮௪

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.

ஒன்பதாவது

## சக்ரவர்த்தித்திருமகன் சரிதமுரைத்த வத்தியாயம்



கலிவிருத்தம்.

என்றலும்பரமனுங்கெழுந்துவானவர்க்
கன்றருள்செய்தவாறரசசொல்கென
ஒன்றியமொழிசிலவுரைக்குமென்றமெய்ந்
நன்றறிசுகமுனிநவிற்றன்மேயினன்.

நவிற்றன்மேயினன் - சொல்லத்தொடங்கினன். (க)

மருக்கமழ்துளவணிமாயன்றடொழூ
அரக்கரையமரர்களடர்த்துநீயெமைப்
புரக்கெனமாதவன்புகன்றவாறவர்
குரக்கெனுமுருக்கொடுகுலவினனரோ,

புரக்கென - காக்கவென்று, குரக்கு - குரங்கு. (உ)

தாவறுபுகழுடைத்தயரதப்பெயர்க்
கோவெழிற்கோசலைகுலவுகேகயன்
பாவைநற்சுமித்திரையென்னும்பைந்தொடி
மூவரைமணந்தனன்முறையினென்பவே.

கோ - சக்ரவர்த்தி. (ங)

பூசலைவெரீஇயபுலவர்வேண்டலால்
வீசலையுறங்குவோன்விளம்பிராமனென்
றாசலைநிகர்குழையுலவும்வாள்விழிக்
கோசலையளித்திடக்குலவினனரோ.

பூசலைவெரீஇய - போருக்கஞ்சின. (ச)

சரதனையறிவனைத்தருமரூபனை
வரதனையிராகவன்மலர்நற்றடொழும்
விரதனைவிண்ணவர்விருப்பினேத்துறு
பரதனைக்கேகயன்பாவைபெற்றனள்.

கேகயன்பாவை - கைகேயி. (ரு)

நிலக்குவன்றுயர்க்கடனீக்கியெண்டிசை
துலக்குவனெனச்சொலசத்துருக்கன்றன்னொடும
இலக்குவன்றன்னையிங்கெழிற்சுமித்திரை
விலக்குவன்பகையெனவிருப்பினீன்றனள்

நிலக்கு - உலகத்துக்கு, துலக்குவன் - விளக்குவேன். (சு)

பால்வருமுலையினர்பானின்றிப்புவி
ல்வருநாட்செயும்வினைகளாதிமுன்

நூல்வருகருமமுமோனமைமைந்தர்கள்
நால்வருமடைந்தனர்நன்குவைகினார்
முன்னூல்வருகருமம் - பூணூற்சடங்கு. (எ)

அன்னவர்நால்வரிலடைந்தகோசிகன்
பின்னெழுந்திலக்குவன்மருவப்பேரருள்
துன்னியவிராகவன்றுனேவிற்போய்ப்பழி
மன்னியதாடகைவதைசெய்தானன்றே
துனேவின் - விரைவாக. (அ)

வருமுனியருளொடுமகஞ்செய்சாலைவாய்ப்
பொருமிருதாடகைப்புதல்வரைச்சினந்
தொருவனையொறுத்துமற்றொருவனைக்கடல்
விரிதிரைகடத்தினான்வீரன்வாளியால்.
மகஞ்செய்சாலை - யஞ்கசாலை, ஒறுத்து - கொன்று. (௯)

இகலறுகோசிகனினிதினாற்றிய
மகமொருகுறைவறமகிழ்ந்துகாத்தபின்
அகலிகைசாபமுமகற்றியற்புதன்
மிருவளம்விளக்கியமிதிலையெய்தினான்.
கோசிகன் - விசுவாமித்திரன். (௧0)

சாற்றியமுனியொடுந்தம்பிதன்னொடும
பாற்றிரையுறங்கியபரன்விதேகையாம்
மாற்றருவளநகர்மன்னனென்றுசொல்
ஆற்றலனெதிர்கொளவடைந்துவைகுநாள்
பாற்றிரை - பாற்கடல். (௧௧)

நல்வளைச்சிதைதன்மணத்தினாட்டிய
எல்வளைத்திடவெழுமெழில்கொண்மேருவாம்
கல்வளைத்தவன்சிலையென்னுங்கட்டெழில்
வில்வளைத்ததிருறவெற்பின்வீழ்த்தினான்.
கல்வளைத்தவன் — மலைவளைத்தவன். (௧௨)

தையையண்டமின்றடைந்ததோவெனக்
காதைவில்லிறுத்தநங்குரிசிலுக்கெழிற்
றையைக்கொடுத்தனன்றேவர்வாழ்த்தநற்
றையென்றுரைபெறுசனகனென்பவே.
வில்லிறுத்த — தநுர்ப்பங்கஞ்செய்த. (௧௩)

உடனுறைதருமிளையோனுமோதையால்
கடிமணங்கேட்டவட்கலந்ததாதையோ

டடைதருபரதனுமணிசெய்தம்பியும்
வடிவிழிமகளிரைமணமங்காற்றினார்

இளையோன் - இலக்குவன். (௧௪)

வதுவைசெய்தணங்கொடுமகிழ்ந்துநாயகன
மிதிலையிற்சில்பகலிருந்துமின்னொடும்
இதமுறுதுணைவருமெவருஞ்சூழ்வரக்
கதுமெனவயோத்தியைக்கருதிப்போயினான்

வதுவை - மணம், கதுமென - விரைவாக. (௧௫)

கல்லையுங்காரிகையாக்குங்காலினான்
எல்லையிருளையோட்டுமவ்வழி
ஒல்லையில்வெகுண்டுறுபரசுராமனோர்
வில்லையும்வளைத்தனனயோத்திமேயினான்.

கல் - கல்லுருவாயிருந்த அகலிகை. (௧௬)

வேறு.

வாமமார்ந்தமலர்க்குழற்சீதையைக்
காமமோடுகலந்துறைகாவலன்
பூமியாளப்புனைவன்முடியெனத்
தாமவேற்கைத்தயாதனெண்ணினான்.

வாமம் - அழகு. (௧௭)

தேனினுய்க்குழற்சீதைமணாளன்வெங்
கானினேகக்கதிர்முடிமாற்றுவான்
கூனியாம்பெயர்கொண்டவணெஞ்சினை
வானநாட்டர்மயக்கினர்வல்லையே.

கூனி - மந்தரை. (௧௮)

மன்னனெண்ணியசெய்கைமனத்திடை
உன்னியுன்னியுருகியகூனவள்
கன்னிமாடங்கலந்துகைகேசிதாள்
சென்னிதாழ்த்துவணங்கினள்செப்புவாள்.

வணங்கினள் - வணங்கி, (முற்றெச்சம்). (௧௯)

வாட்டமின்றியுன்மன்னையிராகவன்
காட்டினேகவுங்காதவனுக்கிலண்
சூட்டவும்முடிசொல்லியமுன்வரம்
கேட்டியென்றுகிளந்தனளாங்கரோ.

கிளந்தனள் - சொல்லினள். (௨0)

சேகயனுருச்செய்தவக்கூனிசொல்
[illegible]ன்மகள்கேட்டனள்வல்லையே

ஏகயனெழிலெய்தப்பொற்றேரொடு
மாகயனெனுமன்னனையெய்தினாள்

கேகயன்மகள் - கைகேயி.

உரத்தினாலொளிசேரரசுள்ளம்போழ்
அரத்தினேருமவளொன்புதல்வனை
இருத்திநாயகனாகவிராமனை
வரத்தினால்வனத்தேகவழங்கென்றாள்

போழ் - பிளக்கிற, அரத்தின் - அரம்போல.

முந்தைநல்கும்வரத்தின்முறைமையால்
சிந்தைநொந்துமெய்தீர்வதற்கஞ்சியே
அந்தமன்னனதற்கியைந்தானவன்
மைந்தனும்வனத்தேகவழிக்கொண்டான்.

மெய்தீர்வதற்கு - சத்தியத்தைவிடுதற்கு

அள்ளியள்ளியூட்டையசெம்பஞ்சையும்
முள்ளதென்றுமுனிதருந்தாளினால்
தெள்ளமுதிற்சிறந்தசொற்சீதையும்
வள்ளல்பின்றொடர்ந்தேகினண்மன்னனே.

ஐய - அழகையுடைய.

உன்னியவ்விறையுமுயிர்நீத்தனன்
மன்னிவைகிவயங்குவதெங்ஙனம்
என்னுமுள்ளத்திலக்குவனுமவன்
பின்னெழுந்துபெயர்ந்தனனென்பவே

உயிர்நீத்தனன் - உயிர்விட்டான்.

கானவண்ணமரவுரிகைக்கொடங்
கானவண்ணமெடுத்தவிராமனும்
ஞானவண்ணனுநங்கையுந்தம்பியும்
போனவண்ணம்புகல்பவர்யாவரே

வண்ணம் - அழகு, மரவுரி — வற்கலை.

எட்டெனுந்திசைமாந்தரவ்வேழையும்
கட்டமைந்தசிலையுங்கணையுறை
புட்டிலுங்கொடிருவரும்போகுழிப்
பட்டதுன்பம்பகர்வல்லாரெவர்.

சீதை.

அகமகிழ்ந்தெதிர்வந்தடிபோற்றிய
குகனொடும்முவந்தாற்றவட்கோதிலாக்

ககனநின்றிழிகங்கைகடந்திட
முகமலர்ந்தொருமூவருமேகினர்.

ககனம் - ஆகாயம். (௨௮)

வரத்தின்மிக்குண்மகிழ்ந்தெதிர்கொண்டநற்
பரத்துவாசன்பதந்தொழுதன்னவன்
இருத்தியென்னவிராமனங்கோர்பகல்
அருத்திகூர்ந்தடகுண்டமர்ந்தானரோ.

அருத்திகூர்ந்து - அன்புமிகுந்து, அடகு - இலை. (௨௯)

ஆங்குநின்றெழுந்தையனணிதிகழ்
வாங்குநுண்ணிடைமங்கையுந்தம்பியும்
பாங்கர்மேவப்படர்ந்துகுறுகினன்
நீங்குநீங்கியசித்திரகூடமே.

பாங்கர் - பக்கம். (௩0)

அவ்வழிச்சிலநாளமர்ந்தன்னையர்
பவ்வமொத்தபதாகினியோடுசேர்
கவ்வையுற்றபரதனைக்கண்டுமன்
எவ்வமற்றவிண்ணெய்தலுங்கேட்டனன்.

பவ்வம் - கடல், கவ்வை - துன்பம். (௩௧)

கேட்டுநெஞ்சுகலுழ்ந்துகிளர்ந்தவக்
காட்டிற்றாதைகடன்கழித்தோதினன்
வாட்டமுற்றபரதற்குவல்லையந்
நாட்டிலேகெனராகவனல்வரம்.

கடன் - ஈமக்கடன். (௩௨)

அழுதுசோரும்பரதனையங்கையால்
தழுவிநல்லனசாற்றியிராகவன்
பழுதிலாத்தனபாதுகைநல்கினன்
தொழுதுமீண்டவன்சுற்றமொடேகினன்.

பாதுகை - திருவடிநிலை. (௩௩)

எண்ணுமுள்ளமியைந்தனன்மீள்கலா
அண்ணல்பாலுற்றவன்னையர்தம்மொடும்
பண்ணமைந்தபடையொடுமீண்டனன்
நண்ணிவைகினனந்திக்கிராமமே

மீள்கலா - மீளாத. (௩௪)

வேறு.

சித்திரகூடமுற்றுறைந்தசேவகன்
த்தரிநெடுங்கணாள்சனகிதன்னொடும்

எத்திசையும்புகழிளையகோவொடும்
அத்திரியுறையுளையணுகினனரோ.

சேவகன் - ஸ்ரீராமபிரான். (௩௫)

எண்டிசைபுகழவங்கெழுந்தராகவன்
தண்டலைவனந்தனைச்சார்ந்துசென்னெறி
விண்டலத்துறவருவிராதற்கொன்றனன்
அண்டருமலர்மழைசொரிந்தங்கார்த்தனர்

தண்டலை - சோலை. (௩௬

ஏற்றவவ்வனத்தினின்றெழுந்துமாதவன்
சாற்றவண்புகழ்ச்சரபங்கன்மெய்யொரீஇ
மாற்றருமுத்தியின்மருவவின்னருள்
நாற்றிசைபுகழ்பவனல்கிப்போயினன்

மெய்யொரீஇ - உடம்புவிட்டு. (௩௭)

கருதுபல்காவதங்கடந்துபோயெதிர்
வருமறைவாணர்தாள்வணங்கிமூவரும்
பருவமாங்குறைதருபத்தும்வைகினர்
அருளுடைமுனிவரர்க்கபயநல்கியே.

மறைவாணர் - வேதியர். (௩௮)

பகைத்திறமுனிவரர்பகர்ந்ததன்மையால்
நிகழ்த்தியவவ்விடனீங்கியெய்தினர்
சகத்தினையொருநிலைநிறுத்துந்தண்டமிழ்
அகத்தியமுனியுறையகத்தையுன்னியே.

நிகழ்த்திய - சொல்லப்பட்ட. ந)

நதிகளும்வனங்களுநடந்துநீங்கினர்
அதிசயமிகவுளவகத்தியற்றொழாத்
துதியுறுமவன்வழிசொல்லிவில்லொடு
குதையுறுகணைதரக்கொண்டுபோயினர்

கணை - அம்பு. (௪0)

விழைவுறீஇமுனிவரன்விளம்புமவ்வழித்
தழைசிறையுடையநற்சடாயுவென்றுசொல்
கழுகெழில்வேந்தனைக்கலந்துகவ்வைநீர்
ஒழுகுகோதாவிரியுவந்துநோக்கினர்.

விழைவுறீஇ - விரும்பி. (௪௧)

வேறு.

அன்னநதிதுன்னினரகன்கரையடைந்த
பன்னுமொருபஞ்சவடிகண்டுபெகர்சாலை

இன்னெழிலிலங்கவிளையோனினிதிழைத்த
மன்னுமனைமூவருமகிழ்ந்துறையுநாளில்

பஞ்சவடி - கோதாவரிக்கரையிலுள்ள ஐந்து ஆலமரத்தோப்பு. (சஉ)

சென்னியொருபத்துடையதீயன்மகிழ்தங்கை
துன்னிவருகின்றவொருசூர்ப்பநகையென்பாள்
கன்னன்மொழியாள்சனகிகாதலனைநோக்கா
நன்னலவுருக்கொடவணண்ணினணயந்தாள்.

சென்னியொருபத்துடையதீயன் - ராவணன். (சங)

அடைக்தவளிராகவனகத்துழியமர்ந்த
மடந்தையரசைசத்தனியள்வவ்வுவனெனச்சேர்
இடந்தனிலிருந்தவிளையோனிதறிந்து
கடந்தநெறிவஞ்சமகளென்றுகதிர்வாளால்

மடந்தையரசை - சீதையை. (சச)

மூக்கினொடுகாதினைமூலக்கணையரிந்தான்
தேக்கணுறைதேவர்நனிதிட்கலுறவன்னாள்
கூக்குரலினோடுகுறுகிக்கொடுமைவிள்ள
மாக்கரியராக்கதர்வளைத்தமர்விளைத்தார்.

மூலக்கணை - மூலக்கண்ணை. (சரு)

விளைத்தகரனுதியர்விளிந்திடவெகுண்டு
வளைத்தசிலைராகவனும்வாளிபலதொட்டான்
திளைத்தகொடுவெம்பகைகடீர்ந்ததெனவானோர்
கிளைத்ததருநாண்மலர்கள்கிட்டினர்சொரிந்தார்.

விளிந்திட - இறக்க. (சசு)

கலிநிலைத்துறை.

மூக்கறக்குறைமுடிப்பநீரிலங்கைமுன்னவனை
நோக்கியுற்றவாறனைத்தையுநுவன்றனளாக
ஆக்கமோடுறைமிராவணனடல்செய்மாரீசற்
போக்கவன்னவன்பொன்னுழையுருக்கொடுபுக்கான்

பொன்னுழை - பொன்மான். [illegible]எ)

பொய்செய்கின்றமான்போந்ததைச்சானகிபுகழா
ஐசெய்கின்றதென்றுசையுற்றறைந்தனளாக
மெய்செய்கின்றவவ்விராகவன்வில்லொடுதொடர்ந்து
வைசெய்கின்றவம்பேயினன்வஞ்சமென்றறிந்தே

[illegible] - அழகு, வை - கூர்மை. (சஅ)

வழங்குமம்பினுன்மாய்ந்துவீழ்காலைமாரீசன்
விளைங்கசீதையையிலக்குவன்றனைவிளித்திறந்தான்.

மொழிந்தவாறுகேட்டிராகவன்மொழியெனநம்மோய்
அழிந்தநெஞ்சினளிலக்குவபோயறிகென்றாள்.

விளித்து – அழைத்து. (சக)

சீதைசொல்லியவாறுகேட்டிளையவன்றீச்சொல்
சூதுசெய்தபொய்யரக்கன்சொலெனநனிசொலலும்
போதியென்னலுமறுத்தியோவென்றவள்புலம்பிக்
கோதுசெய்தவெவ்வுரைபலகூறினள்குழைந்தாள்.

இளையவன் - இலக்குவன். (௫0)

பரிந்துபற்பலவெகுண்டவள்பகர்தலினிளையோன்
விரைந்துநாடுவான்போயபின்மெலிவொடுதனித்தங்
கிருந்தவன்னையையிராவணன்வவ்விவிண்ணெழுந்தான்
கரந்துகொல்வதற்குற்றதுகாலமென்றுணரான்

நாடுவான் - தேட. (௫க)

சனகன்மங்கையையெடுத்தகறசமுகற்றகைந்து
முனிவுகொண்டெதிர்த்தமர்முறைமுறைசெயுஞ்சடாயு
நனிவருந்திடவிருசிறைதுணித்தனனடந்து
புனையிலங்கைபோய்ச்சீதையைச்சிறைபுகுத்தனனால்

தசமுகன் - ராவணன் - தகைந்து - தடுத்து. (௫உ)

மாயமானுருவரக்கனைமாய்த்தவன்மீண்டு
சீயமாமெனவரும்வழிதம்பிசென்றெய்த
மேயவாறெவன்சீதையைவிட்டெனவிளம்பித்
தூயசாலைசென்றெய்தினனவனொடுந்துனைவின்

சீயம் - சிங்கம், துனைவின் - விரைவாக. (௫௩)

சாலையெய்தினன்சானகியெய்துதல்காணான்
மாலையெய்தியவனைகுழலெங்கெனமதித்துச்
சோலையெய்தியசுற்றிலுங்கண்டிலன்றுயராம்
வேலையெய்தினன்பாலெனும்வேலைமேய்மேலோன்

வேலை - கடல். (௫ச)

மனைவிமேற்செலுங்காதலைமாற்றவல்லுநர்கள்
வினைவினீங்கிலையென்பதைவிளம்புவான்போலச்
சனகியெவ்விடத்தாளெனச்சார்ந்தவைநோக்கி
அநகனங்கறைகின்றனவறிகுநர்யாரே.

சார்ந்தவை - அங்குள்ளவற்றை. (௫௫)

வாமவெஞ்சிலையிருவருமவணின்றுவருங்கால்
காமரஞ்சிறையிழந்தவச்சடாயுவைக்கண்டார்

தீமையிவ்வுழிநடந்தனதெரிந்தவனிறப்ப
ஈமநல்வினையியற்றினனிராகவனிரங்கி.

காமர் - அழகு. (௫௬)

ஆங்குநின்றெழுந்தகல்வழிப்புனற்கன்றல்லில்
தீங்குசெய்தவவ்வயோமுகிமூக்கினைச்சிதைத்து
வாங்குவெஞ்சிலையிளையவன்றுணித்தபின்மருவார்ந்
தோங்கிவானெடுங்கவந்தன்வாழ்வனத்தையுற்றனரால்.

அல்லில் - இரவில். (௫௭)

நிவந்தவவ்வனவிலங்கெலாம்வயிற்றிடுகெடுங்கைக்
கவந்தன்மெய்யில்வெங்கணைவிடச்சாபத்திற்கலந்த
பவந்தனையொழிந்தியக்கனுமாங்கவன்பரவி
உவந்துமற்றுநீர்சவரிபாற்போமினென்றுரைத்தான்

வனவிலங்கு - காட்டுமிருகங்கள். (௫௮)

உரைத்தவாறிருவோருமச்சவரிபாலுற்றார்
அருத்திகூர்ந்தவளடுகுநன்மூலமங்களித்து
மருத்தழைந்திடுமேதங்கவெற்பெய்திநீர்மருவும்
விரித்தசெங்கதிர்மதலையையென்றுவீடுற்றாள்

அருத்திகூர்ந்து - அன்புமிகுந்து. (௫௯)

சொன்னவாறிருவோர்களுந்துனைவினிலேகிப்
பன்னுபம்பையாறடைந்தநுமானொடும்பயிலா
அன்னவெற்புறைகதிரவன்மதலையையணுகி
இன்னநீர்தரவவனொடுந்தோழமையியைந்தார்.

துனைவினில் - விரைவில், கதிரவன்மதலை - சுக்ரீவன். (௬0)

அந்தவெங்கதிர்மதலைவெவ்வாலிபோரழிக்கும்
மைந்துகாட்டுதற்கியைந்தனனுகமற்றவன்றாள்
துந்துபிப்புரவென்பெறிந்திடச்சுடர்மலர்க்கை
உந்துமம்பெழுந்தெழுமராமரமுருவியதால்.

மைந்து - வலி. (௬௧)

ஆற்றல்கண்டருங்கதிரவன்சேயகமகிழ்ந்து
தோற்றகாலையில்வாலியைக்கொல்லெனச்சொல்லி
ஏற்றுவாலியோடிருஞ்சமம்விழைந்துநின்றிழைத்தான்
மாற்றருங்கணைமறைந்திருந்தெய்தனன்வரதன்.

சமம் - போர். (௬௨)

விடுத்தவெங்கணைவாலியைவிண்ணகத்தேற்ற
அடுத்தசெங்கதிர்மைந்தனுக்கரசியலளித்து

மடுத்ததீம்புனன்மழைபொழிபருவமவ்வளவும்
உடுத்தகானகத்தோங்குவெற்பிருவருமுறைந்தார்.

இருவர் - ராமலக்ஷ்மணர். (௬௩)

மழைபொழிந்திடும்பருவமாங்ககன்றும்வந்தெய்தாத்
தழைசெழுங்கதிர்மதலையைக்கொணர்கெனச்சாற்ற
எழில்செய்முன்னவன்றம்பிகிட்கிந்தையுற்றிசைப்ப
மொழியுமன்னவன்முடுகிராகவன்முனமடைந்தான்.

மழைபொழிந்திடும்பருவம் - மழைகாலம். (௬௪)

அடைந்தசூரியன்காதலனரிவையைநாட
மிடைந்தவானரத்தலைவரைத்திசைதொறும்விடுத்துத்
திடங்கொள்சாம்பவனீலனங்கதனொடுசிறந்த
இடங்கொடென்றிசைக்கேகெனவநுமனுக்கிசைத்து.

அரிவையை - சீதையை.

அண்ணலாழியொன்றணங்குகைக்கொடுக்கெனவளித்தான்
நண்ணுநால்வருந்தென்றிசைமுழுவதுநாடிப்
பெண்ணினல்லவளுறைதரும்பிலம்புகுந்தவளால்
விண்ணெழுந்தசீர்மகேந்திரவெற்படைந்தனரால்.

அண்ணலாழி - கணையாழி. (௬௬)

அடைந்தவானரத்தலைவர்களணங்கையெவ்விடத்தும்
நடந்துநேடியுங்கண்டிலமன்றியுநவைதீர்
தடங்கொளுஞ்சிறைச்சடாயுவைப்போற்சமர்க்களத்தே
மடிந்திலோமெனவழங்கியங்கிருந்தனர்மாதோ.

நவைதீர் - குற்றமற்ற. (௬௭)

வழங்குமவ்வுரைகேட்டொருமருங்குசம்பாதி
கழிந்தவாறெவன்றம்பிநீர்கழறுதிரென்ன
அழிந்தசிந்தையர்நடந்தவாறனைத்தையுமடைவே
மொழிந்துசீதையைநாடுவான்வந்ததுமொழிந்தார்.

ஒருமருங்கு - ஒருபக்கம். (௬௮)

இலங்கைமன்னவனணங்கொடுமேகுதலெளியேன்
நலங்கொள்காதலன்கண்டுமுனண்ணினன்றட்பக்
கலங்கியன்னவனருளெனக்கான்முளைவிடுப்பச்
சலக்கொள்வாரியிற்றயங்குதனகர்வயிற்சார்ந்தான்

திட்ப - தடுக்க. (௬௯)

விரைந்துசீரிலங்காபுரிமேவினுண்மெலிந்தாங்
கிருந்தசீதையைக்காண்குவீரென்றுசம்பாதி

கரிந்ததன்சிறைபிராகவன் றூதரைக்காணின்
பொருந்துமென்பதோர்வரத்தினிற்பொருந்திடப்போனான்.

கரிந்த - கரிந்துபோன. (எ0)

பெரியவன்சிறைபெற்றவனிராமனைத்துதித்த
எருவைவேந்துரைகேட்டகமகிழ்ச்சியோடிருந்தார்
கரியவாரிதிகடப்பவர்யாரெனக்கருத
அரியவாரிதிகடப்பனென்றெழுந்தனனநுமான்.

எருவைவேந்து - கழுகரசன். (எக)

காற்றின்மாமகன்கடலினையிடரறக்கடந்து
நாற்றிசைக்கணுமிலங்கையிற்புகுந்தனனொடி
ஆற்றல்சேர்பகையற்றிடவசோகமாவனத்தில்
கோற்றொடிக்கையாளுறைவதுகண்டுளங்குளிர்ந்தான்.

காற்றின்மாமகன் - அநுமான். (எஉ)

சூழிராக்கதர்மடந்தையர்துயில்புரியிரவின்
வீழிவாயெழிற்சீதைமுன்மேவியவநுமான்
ஆழிபார்சொலக்கற்பினுக்கரசிகைக்கொடுத்து
வாழிராகவன்செய்திறமுரைத்தனன்மாதோ.

கற்பினுக்கரசி - சீதை. (எ௩)

மருக்கமழ்ந்தபொற்றருக்களைவளைத்தனனொடித்து
வெருக்கொள்கிங்கரர்விளிந்திடவடித்தனன்விரைந்து
முருக்குமென்றழைத்திராவணன்முறைமுறைவிடுத்த
அரக்கர்யாரையுஞ்செகுத்தனனார்த்தனனநுமான்.

விளிந்திட - இறக்க. (எச)

அன்னகாலையிலிந்திரசித்தெழுந்தநுமான்
தன்னையுற்றயன்வாளியின்வீக்கிநற்றூதை
முன்னருய்த்தலுமரக்கனீயாரெனமொழிவோன்
உன்னைக்கொல்லுமவ்விராகவன்றூதனென்றுரைத்தான்.

அயன்வாளி - பிரமாஸ்திரம். (எரு)

தரங்கவேலையைக்கடந்தவன்சாற்றுதல்கேளாக்
குரங்கைநீரிவண்விரைந்துகொல்லுதிரெனக்கொடியோன்
மருங்குசேர்தருவீடணன்றூதரைவருத்தி
இரங்கமாய்ப்பதிங்கறங்கொலோவெனவிலக்கினனால்.

கேளா - கேட்டு. (எசா)

கொடியராவணன்றுகினனிசுற்றியிக்குரங்கின்
நெடியவாலினினிறுவுமின்றழலைநீரென்ன

அடிவணங்கினர்த்திறம்புரிந்தனல்கொளுவ
முடியவர்நகர்சுட்டனன்மாருதிமுழுதும். (௭௭)

மாருதி - அநுமான்.

சனகிவைகிடனன்றிமற்றெங்கணுந்தழல்வைத்
தநுமன்வந்தடிவணங்கியச்சீதைபாலணியாய்
வனையுநல்லசூடாமணிவாங்கியவ்வேலை
துனைவிற்றாவினன்றோன்றினன்மகேந்திரச்சுரும்பில். (௭௮)

சுரும்பில் - மலையில்.

அங்கதன்முதலாங்கடைந்தோருக்கவ்வணங்கை
நங்கணாயகன்றேவியைககண்டவாநவின்று
துங்கவேறனவவரொடுந்துனைவின்வந்திறைஞ்சிச்
செங்கணானுக்குஞ்சீதையைக்கண்டமைதெரித்தான் (௭௯)

துனைவின் - விரைவாக

மண்டுநீர்க்கடல்கடந்தனனடந்தமைவழங்கிப்
பண்டைநான்மறைக்கரியவன்பதுமமென்காத்தில்
தொண்டைவாய்மயிலளித்தசூடாமணியளிப்ப
அண்டர்நாயகனம்மணிகண்மணிக்களித்தான். (௮0)

தொண்டை - கொவ்வைக்கனி.

தேனிரைத்ததார்ச்செழுங்கதிர்மகன்முனஞ்செல்ல
நீணிறக்கடல்கடந்தவனீலனேமுதலாம்
வானரப்படைவளைதரவிளையவன்மருவக்
காணகத்தினைக்கடந்தனன்கடல்வணனெழுந்தே. (௮௧)

கதிர்மகன் - சுக்ரீவன்.

விரியுமூவுலகத்துமன்னுயிர்க்கணேவிளங்கிப்
பெருகுமாறுவந்தருட்புனனிச்சலும்பெய்யும்
சரியமாமுகிற்கொழுந்தெழுகடற்படையோடு
திரைசெய்வாரிதிப்புறத்தினிற்சென்றிறுத்ததுவே. (௮௨)

இறுத்தது - தங்கிற்று.

கலிவிருத்தம்.

ரிகர்த்தவானரநற்சேனையின்
நூற்கடல்கடந்தபேரறிவின்வைகுறும்
நாற்கடனிலம்புகழ்நம்பிவைகினான்
பாற்கடல்வைகியபான்மையென்னவே. (௮௩)

நம்பி - ஸ்ரீராமன்.

வேறு.

வலங்கொடிண்சிலைவள்ளல்கடற்கரை
நலங்கொள்சேனையினண்ணினனென்றலும்

புலங்கொள்புந்தியிற்புன்மையர்தம்மொடும்
இலங்கைமன்னவனெண்ணலுற்றனரோ.

வலங்கொடிண்சிலைவள்ளல் - ஸ்ரீராமபிரான். (௮௪)

எண்ணுங்காலையங்கெய்தியவீடணன்
அண்ணறேவியருஞ்சிறைநீக்கென
நண்ணுபற்பலநல்லறங்கூறலும்
கண்ணிற்றீயெழநீகடிதேகென்றான்.

அண்ணறேவி - சீதை. (௮௫)

முனிவுகொண்டுதன்முன்னவனீக்கலும்
வினைகடந்தநல்வீடணன்வல்லைபோய்த்
தனிமுதறிருத்தாண்மிசைவீழ்ந்தனன்
அநகனும்மநுமான்முகனோக்கினான்.

வல்லை - விரைவாக. (௮௬)

நல்லனென்றனுமான்சொலநாயகன்
அல்லலீங்கொழியென்றபயங்கொடுத்
தெல்லிலங்கைக்கிறையவனாகெனச்
சொல்லிலங்குசுடர்முடிசூட்டினான்.

அல்லல் - துன்பம். (௮௭)

கருணைகொண்டவக்கண்ணன்கருதலும்
வருணன்வந்திலனென்றுமலர்விழி
அருணம்வந்தவனம்பரத்தேவினான்
தருணவெய்யவன்போன்றதழற்கணை

அருணம் - செவப்பு, அம்பரம் - கடல். (௮௮)

அன்னகாலையறிந்துவருணன்வந்
தின்னநீர்க்குமிராமனையெய்தியுன்
மன்னுசீர்சொலிவாழ்வுறயாருமென்
சென்னிமேலணைசெய்யெனச்செப்பினான்

இன்னல் - துன்பம். (௮௯)

அளவிகந்தவரிக்குலத்தோரெழில்
வளரநின்றவரைக்குழுவுய்த்திட
உளமுவந்துநூறோசனையாமணை
நளன்விரைந்தவணன்கமைத்தானரோ.

அரிக்குலத்தோர் - வாநரகுலத்தோர். (௯௦)

அணைகடந்தருஞ்சேனையொடாங்குயர்
ஏணைகடந்தசுவேலவெற்பெய்தினான்

இணைகடந்தவிலங்கெழிற்சீதையாம்
கணைகடந்தகண்ணாட்புணர்காதலன்.

கணைகடந்த - அம்பைவென்ற. (௧௧)

கோதறுமேவுமிலங்கையர்கொற்றவன்
தூதராஞ்சுகசாரணராங்குற
ஏதநீங்கவின்றெங்கணுநாடிப்போய்
ஓதுசீரென்றிராமனுணர்த்தினன்

ஏதம் - குற்றம். (௧௨)

வேறு.

நாடிய தூதர்போய்நவின்றவாறுகேட்
டேடலரலங்கலானிலங்கைகாவலன்
நீடியகோபரநின்றுநோக்கினன்
ஆடவர்திலகனுமாங்குநோக்கவே.

ஆடவர்திலகன் - ஸ்ரீராமபிரான். (௧௩)

ஆரியனுமெலையடைந்துநோக்கிய
சூரியன்காதலன்றனைவிற்றாவிப்போய்ப்
பாரினிலிலங்கையான்பைம்பொன்மாமுடி
சீரறவீழ்த்தினன்றிருமியெய்தினான்.

சூரியன்காதலன் - சுக்ரீவன். (௧௪)

பங்கயச்செங்கணன்பணித்தவேலலால்
அங்கதன்றூதுபோயறைந்திராவணன்
வெங்கதங்கொளவவன்மீண்டகாலையில்
பொங்கரிச்சேனைபோய்ப்புரிசைசூழ்ந்ததே.

வெங்கதம் - கடுங்கோவம், அரிச்சேனை - வாநரசேனை.

வேறு.

எயிலைமுற்றியெதிர்ந்தவரக்கரை
அயிலெயிற்றவரிக்குலத்தோர்செறப்
புயலையொத்தவன்பொன்முடிபத்தும்வெவ்
வெயிலையொத்தொளிர்வேங்தொடுமேற்றனன்.

புயலையொத்தவன் - ஸ்ரீராமபிரான். (௧௫)

தாரையொத்தகரியவன்றம்பையர்
தாரையொத்ததசமுகனோடுஞ்செய்
போரைமற்றெவர்சொல்வாப்புன்மையோன்
பாரையுற்றனன்றேர்படையற்றரோ.

தசமுகன் - ராவணன். (௧௭)

தஞ்சமற்றதயமுகன்றன்னைநீ
செஞ்சரத்தொடேந்தீர்ந்தனையாவையும்

தஞ்சமற்றினித்துன்னுதிநாளையென்
றஞ்சனப்புயலன்னவன்கூறினான்,

தஞ்சமற்ற - ஆதரவற்ற. (௯௮)

எண்சுமந்தவிராமனிதுசொல
நாண்சுமந்துநடந்தவிராவணன்
கோண்சுமந்தகும்பகருணன்றனைப்
பூண்சுமந்தபுயவலிகாட்டென்றான்.

எண் - பெருமை. (௯௯)

கும்பகன்னன்குறுகிக்கொடுஞ்சமர்
உம்பரும்வெருக்கொள்ளவுருத்தினான்
நம்பிவெங்கணைநாடியங்கேவலால்
அம்பரத்திலவன்றலையாழ்ந்ததே.

அம்பரத்தில் - கடலில். (௧00)

மடிதல்கேட்டுளமாழ்கித்தயமுகன்
புடையின்மேயபுதல்வனெனப்புகல்
அடல்செய்வேலதிகாயனையேவினான்
படையினோடும்படர்ந்தமர்செய்யவே.

அமர்செய்ய - போர்செய்ய. (௧0௧)

தமரமாக்கடற்றானையொடெய்திவந்
தமர்செய்வானதிகாயனையாயிதழ்க்
கமலமேயவெண்கண்ணன்படைவிடுத்
திமைசெய்போழ்தினிலக்குவன்வீட்டினான்

கமலமேயவெண்கண்ணன்படை - பிரமாஸ்திரம். (௧0௨)

கலிநிலைத்துறை.

ஈடுதானையோடெழுந்ததிகாயனங்கிறத்தல்
நாட்டநீருகக்கேட்டவண்ணலர்வெருவக்
கோட்டுவார்சிலையிந்திரசித்துவைக்குறுகி
வீட்டிவாபகைவேந்தரையென்றனன்விடுத்தான்.

நண்ணலர் - பகைவர். (௧0௩)

அன்னவிந்திரசித்தெழுந்தந்தரத்தொளித்தே
இன்னல்செய்யரவக்கணையேவினனிளையோன்
றன்னெஞ்சுந்தனித்தாரகப்பொருளவற்பிணிப்பப்
பன்னுபுள்ளரசங்குறவிரித்ததப்படையே.

அரவக்கணை - நாகாஸ்திரம். (௧0௪)

கோளைநீங்குவெண்குளிர்மதியெனச்சிலையொடுகூர்
வாளைநீங்கிடாத்தம்பியோடெழுந்தமாயனைத்தான்

தோளைநீங்கியதோன்றலைத்துதித்தனன்றெழுதான்
தாளைநீங்குறுதன்புசெய்தடஞ்சிறைக்கருளன்

நளன் - கருடன். (கoரு)

புள்ளின்வேந்துபோயகன்றபின்புகல்கவிக்குலத்தோர்
தெள்ளுநெண்டிரைப்பரவையிற்சிலைத்தனர்சீற
எள்ளருந்திறலிராவணன்கேட்டவனைவும்
தள்ளருந்தருக்கரக்கர்கள்சாய்ந்தனர்சமரில்

பரவை - கடல். (கoசு)

கோட்டுமால்கரிவாம்பரிக்கொடிஞ்சியந்தடந்தேர்
ஈட்டமோடெழுந்தெண்ணிலரிருபுடைநெருங்க
மீட்டுமிந்திரசித்தரிக்குலத்தினர்வெருவப்
பூட்டுவார்சிலையோடுவெம்பொருகளம்புகுந்தான்

அரிக்குலத்தினர் - வானரகூட்டத்தோர். (கoஎ)

ஆர்த்திராவணியயன்படைவிடுப்பவப்படையால்
தார்த்தடம்புயவீடணன்சாம்பவன்றழுங்கக்
கார்த்தடங்கடல்கடந்தவனன்றியக்களமாம்
பார்த்தலத்தினிலடைந்தவர்வீழ்ந்தனர்பதைத்தார்.

இராவணி - இந்திரசித்து. (கoஅ)

உருத்திராவணியொல்லையில்விடுத்தவப்படையால்
தரைத்தலத்திடைவீழ்ந்தவர்யாவருந்தனிப்போய்
மருத்துமாமலைமாருதிவல்லையிற்கொணர
அருத்திகூர்துயிலுணர்ந்தவராமெனவெழுந்தார்.

மாருதி - அநுமான். (கoகூ)

அன்னகாலைவெம்மாயைசெய்தகன்றிராவணிபோய்
இன்னல்செய்யுமோர்வேள்வியைநிகும்பலையிடத்துத்
துன்னியாற்றுதலறிந்தழித்தரிக்குலத்தோடு
மன்னுநீள்சிலையிலக்குவன்வளைத்தமர்விளைத்தான்.

அரிக்குலத்தோடு - வானரகூட்டத்தோடு. (ககo)

தேரினேறியங்கெதிர்தருமிந்திரசித்தும்
ஏரினேறியமாருதிதிறற்புயத்தேறிப்
போரினேறியவிலக்குவனும்பொருதிறத்தைப்
பாரின்யார்சொல்வார்பங்கயத்தயனுக்குமரிதால்

மாருதி - அநுமான். (கசக)

இந்துவின்கணையிலக்குவன்வில்வளைத்தேவ
வந்தெதிர்ந்தவவ்விந்திரசித்தவண்மாய்ந்தான்

சுந்தரநதிகழரசுமபெற்றனமெனச்சுரர்கள்
அந்தரத்தினின்றலர்மழைதூர்த்தனரார்த்தார்.

இந்துவின்கணை - அர்த்தசந்திரபாணம். (௧௧௨)

மைந்தனிந்திரசித்தவண்மாய்ந்ததுகேட்டுச்
சிந்தைநொந்திராவணனிருபான்விழிவழிநீர்
உந்துதுன்பவெவ்வலையெறிநீர்க்கடலுற்றான்
நிந்தைவந்தவன்பின்னருமமர்செயநினைந்தான்.

இருபான்விழி - இருபதுகண். (௧௧௩)

மிடல்கொண்மூலமாபலமெனும்வீரரைவிடுத்தான்
கடிகையேழினிலிராகவனவருயிர்கவர்ந்தான்
கொடியராவணன்றேரிவர்ந்தயிற்படைகொண்டு
படைகள்சூழ்வரப்படுகளத்தெதிர்ந்தனன்படர்ந்தே.

மிடல் - வலி, இவர்ந்து - ஏறி. (௧௧௪)

மருவியிந்திரனேவலின்மாதலிகொணர்ந்த
பெரியபொற்றடந்தேரிவர்ந்தம்பிணைப்பெய்யும்
கருமுகிற்கொழுந்தன்னவன்கார்முகங்கோட்டி
ஒருமடந்தையையொளித்தகல்கள்வனென்றுடன்றான்.

கார்முகம் - வில். (௧௧௫)

இராமராவணவுயுத்தமாமெனவிமையவரும்
தராதலத்துறுஞ்சமர்க்கெலாமுவமையாச்சாற்ற
முராரியாமுதறசமுகனுமெவண்முயன்ற
புராதனச்சமர்க்குவமைவேறெடுத்தெவர்புகல்வார்.

புராதநச்சமர் - பழையபோர். (௧௧௬)

திசைமுகன்படையெடுத்திராகவன்சினந்தேவித்
தசமுகன்றனைமாய்த்தனன்மாய்த்தலுந்தயங்கும்
குசமுகங்களிற்குங்குமங்கோட்டரம்பையரோ
டிசைமுகம்மலர்ந்திணர்மழைபொழிந்தனரிமையோர்.

திசைமுகன்படை - பிரமாஸ்திரம். (௧௧௭)

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தள்ளருந்துயர்கூரரக்கியர்யாருந்தலைவிரித்தனரழுதேங்க
வெள்ளியம்பொருப்பங்கெடுத்தவன்முதலாவெஞ்சமரழுவத்தின்மாய்ந்த
அள்ளிலைநெடுவேலரக்கருக்கெல்லாமருந்திறல்வீடணனென்பான்
எள்ளரும்புகழ்சேரிராமனின்னருளாலியற்றுநீர்க்கடன்கழித்தனனால்.

வெள்ளியம்பொருப்பங்கெடுத்தவன் - ராவணன். (௧௧௮)

லங்கைகாத்தளிப்பவீடணற்காயுளியம்புமோர்கற்பமதளித்து
நலங்கிளர்கற்பினரசியென்றெவருநவிற்றுநங்கையர்க்கரசியையவ்

விலங்கிவில்லுமிழும்புட்பகவிமானமீதுவைத்திளையவனோடும்
உலம்பொருபுயவானரருடனிருப்பவுறைந்திராகவனெழுந்தனனால்.

நங்கையர்க்கரசி - சீதை. (கக௯)

அங்குநின்றகன்றுகிட்கிந்தையென்னுமணிகிளர்நகரிடையடைந்து
செங்கதிரவன்சேய்முதலியகவிகள்சேர்தருமனைவியர்யாரும்
பொங்கெழிற்சீதைமருங்குசூழ்ந்திருப்பப்புனிதனப்புறத்தெழுந்தேகித்
தங்கியதவத்தோர்சாலைகளனைத்துந்தையலுக்கறைந்துபோயினனால்.

கவிகள் - வானரர்கள். (க௨0)

அருந்தவம்புரியும்பரத்துவாசப்பேரந்தணன்விருந்தினிதளிப்ப
மருந்தினுமினியவுண்டியையருந்தியாவருங்குகனெடும்வருங்கால்
பொருந்தியவரவுமாருதிமுன்போய்ப்புகன்றிடநந்தியம்பதியின்
இருந்தவேற்பரதனெழிற்படைசூழவெதிர்கொள்வான்குருவொடெழுந்தான்

மருந்தினும் - தேவாமிர்தத்தினும். (க௨க)

எழுந்தவேற்பரதனிளையவனோடுஞ்சென்றடித்தாமரையிணைமேல்
விழுந்தனனிறைஞ்சவிமானநின்றிழிந்துவிருப்பொடுமிளைஞரைத்தழுவித்
தழும்புறவிறல்விறரித்ததோட்டம்பிதன்னொடுதாயரைவணங்கி
மொழிந்தநான்மறைதேர்வசிட்டனைத்தொழுதான்முந்தைநான்மறையினோர்வரியான்.

தழும்பு - சுவடு. (க௨௨)

தாரையேமுதலாமங்கையர்சூழச்சானகிதானுமங்கிழிந்து
காரைநேர்குழலார்மாமியர்மலர்த்தாள்காதலின்வணங்கினள்வள்ளல்
வீரமேவியதன்றம்பியர்முதலாம்விருப்பொடங்கடைந்தவரோடும்
ஏரினால்விளங்கும்புட்பகத்தேறியெய்தினனந்தியம்பதியே.

தாரை - வாலிமனைவி. (க௨௩)

நந்தியம்பதியினிளைஞர்தம்மோடுநலஞ்செய்வானரர்களோடும்
அந்தமில்புகழ்சால்வீடணன்குகன்மற்றடைந்தவர்தம்மொடுமமர்ந்து
சந்தமுந்துகிலுமாலையும்பூணுந்தரித்தனன்புட்பகந்தனைச்
மந்திரிபாற்போகெனவவன்விடுத்தான்மறைக்கெலாம்வரம்பெனலாவான்

மந்திரி - குபேரன். (க௨௪)

கனைகடற்றுனைப்படைவளைத்தெழக்கார்முழக்கெனவியந்துவைப்பத்
தினகரன்சிறுவன்வீடணனோடுதெண்ணிலாக்கவரிகாலசைப்பப்
பணிமதிக்கவிகைமாருதிபிடிப்பப்பரதன்முன்றேர்விடவியந்து
புனைதருமயோத்தியெனுநகர்க்கெழுந்தான்புலவருக்காயிவட்புகுந்தான்.

இயம்துவைப்ப - வாத்தியம் முழங்க. (க௨௫)

கலிவிருத்தம்.

புரந்தரன்புரம்போற்புனைந்தார்நகர்
வரந்தருநெடியோன்வரயாவரும்

விரைந்தெழுந்தெதிர்கண்டனர்விண்மழை
பரிந்துகண்டபயிர்க்குப்பூப்பண்பினே.

புனைந்தார் - அலங்கரித்தார். (௧௨௬)

அஞ்சனத்தணியம்பணைசூழ்தரும்
அஞ்சனத்தணிசேருமயோத்தியாள்
அஞ்சனத்தருக்கண்மணியாமென
அஞ்சனத்தெழில்வண்ணலங்கெய்தினன்.

அஞ்சனத்தெழில்வண்ணல் - ஸ்ரீராமபிரான். (௧௨௭)

எற்றுதெண்டிரையேழ்கடற்றனைசூழ்
ஒற்றைவெண்குடையோனும்வந்தெய்தலும்
அற்றமற்றசராசரம்யாவுமாங்
குற்றவின்பமுரைக்கடங்காதரோ.

அற்றம் — முடிவு. (௧௨௮)

நீடுந்தோயங்கொள்வானினைநீள்வரை
நாடுந்தோகைகளென்னவந்நாதனை
ஆடுந்தோரணவீதிகளார்த்துயர்
மாடந்தோறுமடந்தையர்நோக்கினர்,

தோயம் - நீர், தோகை - மயில். (௪௨௯)

## வேறு.

நோக்கியநோக்கொடுநவன்றமங்கையர்
நீக்கருங்காதல்செய்மனமுநீண்டதார்
தூக்கியவீதியிற்றொடர்ந்துபின்செல
மாக்கருமுகிலனான்வாயிலெய்தினன்.

மாக்கருமுகிலனான் - ஸ்ரீராமபிரான். (௧௩0)

பூமகன்மகனெனும்புகழ்செயன்னவன்
ஏமுறாயினர்மற்றேனையோரொடும்
தேமலரணிகுழற்சீதையென்றுசொல்
கோமகடன்னொடுங்கோயில்புக்கனன்,

பூமகன் மகன் - வசிட்டன். (௧௩௧)

மடவாறன்னெனும்வயங்கிராமற்குக்
கடனதிமுதலியகவின்செய்நீரினால்
நடைபெறவசிட்டமாமுனிநன்காட்டினன்
சுடர்விரிமணிமுடிசூட்டினனரோ.

கடனதி - கடல்நதி. (௧௩௨)

ஆயருமிளைஞருஞ்சனகன்பாவையும்
மேயபூவுலகரும்விண்ணுளோர்களும்

ஏயபேர்மகிழ்ச்சியோடிருப்பவெங்கணும்
நேயனோர்மதிக்குடைநிழற்றினனரோ.

சனகன்பாவை - சீதை. (௧௩௩

உரைதருதீயனவொழிந்துபாறின
மருவுநல்லறமெலாம்வளர்ந்தமாமழை
இருவளஞ்சுரந்தனவேகதாரனும்
கரியவன்கடற்புவிகாவல்செய்யவே.

பாறின - ஓடின, ஏகதாரன் - ஸ்ரீராமபிரான். (௧௩௪)

கரங்களிற்கணைபொழிகரியமாமுகில்
தரங்கநற்கடற்புவிசார்ந்துகாக்குநாள்
புரங்களுநதிகளும்புள்ளுமாக்களும்
மரங்களுமலைகளுமகிழ்ச்சிகூர்ந்தவே.

கரியமாமுகில் - ஸ்ரீராமபிரான். (௧௩௫)

மிகும்பொருட்குவையெலாம்விருப்பின்வேதியர்
புகுந்தனர்முகந்துதாம்போகநல்கிமுச்
சகம்புகழ்வசிட்டனுற்றயங்கிராகவன்
மகம்பலபுரிந்தனன்மகிழ்ந்துவைகினான்.

மகம் - யாகம். (௧௩௬)

சினத்தொடுமரக்கரைச்செகுத்தசெஞ்சிலைக்
கனத்தினிற்றிகழ்பவன்கதைகள்கேட்குநர்
நினைக்குநர்வைகுவோர்நிகழ்த்தும்வண்மையோர்
மனத்தினில்விழைந்தனமருவிவாழ்பவே.

கனத்தினின் - மேகம்போல. (௧௩௭)

சக்கரவர்த்தி திருமகன் சரிதமுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—௩௨௧.

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.

## பத்தாவது

## கண்ணுடைச் சோதிக்கெழுந்தருளிய சரித முரைத்த வத்தியாயம்.



திருப்பிறைநுதலினள்சீதையென்பவள்
விருப்பொடுநாயகன்விளங்குபூணணி
பொருப்பெனுமிணைப்புயம்புல்லியன்புசெய்
கருப்பமன்குற்றனள்களித்துவைகுநாள்.

பொருப்பு - மலை, இணை - இரண்டு.

அரக்கர்கோன்வெளவியவணங்கைநீக்கிலான்
மருக்கமழலங்கலான்மணந்ததென்கொலென்
றிரக்கமில்சிதடனுங்கிசைத்தனல்லறம்
புரக்கவந்தருள்புரிபுனிதன்கேட்டனன்.

அரக்கர்கோன் - ராவணன். (௨)

நற்புகழ்த்தம்பியானுதன்சீதையாம்
சற்பினுக்கரசியைக்காட்டினீக்கினன்
பொற்பினிற்பொலிபவள்புலம்புற்றேங்கலால்
வெற்பொடுமரங்களுமெலிவுகொண்டவே.

புலம்புற்று - துன்பமடைந்து. (௩)

மாதவம்புரியும்வான்மீகிதானழல்
மீதுறுபிணையெனமெலிவுற்றேங்குமச்
சீதையைக்கண்டுளந்தேற்றித்தானுறை
கோதறுசாலையுட்கொண்டுபோயினன்.

பிணையென - பெண்மான்போல. (௪)

தன்னருட்சாலையுட்டவஞ்செய்மாதர்பால்
அன்னையையடக்கலமாகவைத்தனன்
இன்னெழின்மிக்குளவிரட்டைப்பிள்ளையாய்
மன்னுமச்சீதையும்வயிறுவாய்த்தனள்.

வயிறுவாய்த்தனள் - பெற்றாள். (௫)

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

முனிவரன்குசையின்கடையிற்றைவரலான்முன்னவனைக்குசனென்பார்
இனியநல்லடியிற்றடவரலாலவ்விளையவன்றனைலவனென்பார்
அனையவர்பிறைபோல்வளருநாளவருக்கறைந்தவான்மீகியென்றுரைப்போன்
தனிமறைவிளம்புசெளளமேமுதலாச்சாற்றுநல்வினைபுரிந்தனனால்.

குசை - தருப்பை. (௬)

பொருவருந்திறலான்வரதனென்றுரைப்போன்புட்கரனெனும்புரவலனோ
டிருநிலம்புகழுந்தக்கனையீன்றனிலக்குவனங்கதனுடனே
தரியலர்வணங்குஞ்சந்திரகேதுதனையுயிர்த்தனன்சொல்சத்துருக்கன்
சொரிமதுத்தொடையான்சுவாகுவிறெடுஞ்சுருதசேனனையளித்தனனால்.

தரியலர் - பகைவர். (௭)

பொன்னிறச்சீதையுருவமொன்றமைத்துப்புரவியின்வேள்விபத்தாற்றும்
கன்னியந்துளவமுகுந்தனென்றுரைக்குங்கரியவன்சாலையிலடைந்து
தன்னெழிற்சரிதமுனிவரனருளாற்றநயர்கள்பாடுதல்கேளாப்
பின்னருமுவகைப்பரவையின்மூழ்கிப்பல்பொருள்பெறுதிரென்றிசைத்தான்.

உவகைப்பரவை - சந்தோஷசாகரம். (௮)

மைந்தரவ்விராமன்பணித்தசொல்கேளாமாதவம்வனத்திடைபுரிவோர்
நந்தலில்பொருள்வேட்டடைதரீதென்னநவிற்றினர்போயபின்றாதன்
இந்தநல்லவையோர்யாவருங்காணவியம்பருஞ்சூளுரையதனால்
கொந்தலர்குழலாள்சீதையையடைவேன்கொணருதிர்விரைவினென்றுரைத்தான். (௧)

சூளுரை - சபதவார்த்தை.

அவ்வுரைகேட்டதூதர்போயிசைப்பவருந்தவம்புரியும்வான்மீகி
கொவ்வையங்கனிவாய்ச்சீதையைக்கொணர்ந்துகோதிலாவவைக்களநிறுவி
எவ்வமில்கற்பாற்பழிப்பிலளிவளென்றிசைத்தனன்சீதையுமிசைப்பாள்
செவ்வியகற்பிற்றிறம்பிலேனென்னிற்சேர்நெறிபுவிதருகென்றாள்.

அவைக்களம்நிறுவி - சபையில்நிறுத்தி.

என்றலுந்தரைவிண்டடவதினெழுந்தவெரிமணித்தவிசிடையேந்தி
மன்றலங்குழலாள்சீதையைப்புவிமான்வௌவினள்யாவருமறுகக்
குன்றெனுந்திணிதோட்கொற்றவன்சீறிக்குவலயமடந்தையைக்கோறும்
வென்றியாங்கணையாலெனவயனுற்றுவெகுளிநீயொழிதியென்றுரைப்பான்.

கோறும் - கொல்வோம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

திருந்திழைச்சீதையெம்மோய்சேர்ந்தனடிகழ்வைகுந்தம்
பொருந்துதியெந்தாயென்றுப்போற்றினன்போயபின்னர்
அருந்திறலயனன்றுளகன்றகற்கயர்ந்தான்போலின்
மருந்துறழ்மனையார்தம்மைப்பிரிந்தெவர்வைகவல்லார்.

ஓய் - தாய். (௧௨)

மருவியமைந்தர்தம்மைமலர்புரைகையிற்புல்லி
உருகியவுள்ளத்தோடுமுவப்பொடுமுச்சிமோந்தான்
அருளொடுபதின்மூன்றாயவாயிரம்பருவமாநீர்
இருநிலம்புரந்தான்செங்கோலிராமனென்றுரைக்குமெம்மான்.

உவப்பொடும் - சந்தோஷத்தோடும். (௧௩)

மருவுதன்புதல்வருக்கும்வயங்குநலிளைஞர்பெற்ற
பொருவரும்புதல்வருக்கும்புகல்புகத்திசைகடோறும்
கருணைசெய்திருந்துவையங்காக்குமாமௌலிசூட்டித்
தரைபுகழ்சரயுவுற்றான்சதுமறைமுடிவிலுற்றான்.

மௌலி - முடி. (௧௪)

கோசலநாட்டுமேயசராசரமனைத்துங்கூறும்
தேசுறுவானஞ்சாரத்திருவருள்புரிந்திராமன்
பேசியவிளைஞரோடும்பிறங்குவைகுந்தமெய்தி
ஆசறுமரவப்பாயலாதியாயமர்கின்றானல்.

அரவப்பாயல் - சர்ப்பசயநம்.

என்னையாளுடையவையனிராகவன்சரிதமீதை
மன்னுமாதவருமேலாம்வானவர்முதலினோரும்
பன்னுமின்னமுதமூறப்பாடுநர்வீடுசேர்வர்
சொன்னவிக்காதைகேட்போர்துயரறுநலந்துய்ப்பாரால்.

ஈதை - இதனை (௧௬)

மருவிளைகாட்டின்மேயவானரர்துணைபோன்மேவ
அருவினைமூட்டும்பொல்லாவரக்கரையமரின்வீட்டும்
ஒருவிளையாட்டுநெஞ்சத்துவந்தருளிராமனீன்ற
குருவிரிசூட்டுவைவேற்குசனதிதியைப்பெற்றானால்.

மரு - வாசனை, குரு - நிறம். (௧௭)

அருள்புரிந்துலகங்காத்தவதிதிதன்மரபில்வந்து
மருவினன்மருத்தென்றோதுமன்னவனன்னோனின்னும்
கருதருந்தவகன்றாற்றிக்களபநற்கிராமமென்னும்
ஒருநகருறைகின்றானுலுரைதருங்கலிகாலத்தில்.

கருதருந்தவம் - நினைத்தற்கரியதவம். (௧௮)

சூரியன்மரபொன்றின்றித்தொலைவுறுமீட்டுமந்த
ஆரியமரபைமேவுமாதியாமுகத்துண்டாக்கிப்
பாரகம்புரப்பானன்னோன்பகர்பெருமரபின்மன்னர்
தாரணிபுரந்துபோயார்சாற்றுமம்மரபுதன்னில்.

சூரியன்மரபு - சூரியவமிசம். (௧௯)

சொல்லுமிக்கலியினின்னுஞ்சுமித்திரனந்தமாக
நல்லெழிலரசர்தோன்றிநானிலங்காப்பர்சில்லோர்
மல்லமர்மணிப்பூணிக்குவாகுவின்மரபுபின்னர்
செல்லுறழ்தடக்கைவேந்தேதீருமென்றுரைசெய்தானால்.

செல் - மேகம்.

தன்னுடைச் சோதிக்கெழுந்தருளிய கதையுரைத்த வத்தியாயம்

முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—௩௪௧.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.



# பதினோராவது.

## நிமிமர புரைத்த வத்தியாயம்.



கலிநிலைத்துறை.

இக்குவாகுவென்றிசைதருநிருபர்கோனீன்ற
மக்கணூற்றுவர்தங்களினிமியெனுமன்னன்
மிக்கசீர்புனைமரபினைவிண்டுராதனுக்குத்
தொக்கநான்மறையொருங்குணர்சுகமுனிசொல்லும்.

நிருபர்கோன் - அரசர்க்கரசன். (க)

இமிழ்தடந்திரையிருநிலமினிதினோம்புதல்செய்
நிமியெனும்பெயர்மன்னவனெடுமகம்புரிவான்
அமிழ்தருந்தினர்புகழ்தருவசிட்டனையழைப்ப
உமிழ்செழுங்கதிர்வேலவவெனமுனியுரைப்பான்.

இமிழ் - ஒலிக்கின்ற. (உ)

அரியமாமகமிந்திரனாற்றுவான்றொடங்கி
உரைசெயைந்துநூறென்னுமாண்டொழிந்தனவின்னும்
விரவுமைந்துநூறாண்டினவ்வேள்விமுற்றுறும்பின்
பொருவினீமகம்புரிதரப்புகுவலென்றுரைத்தான்.

ஆற்றுவான் - செய்ய. (ங)

என்றுகூறலுநிமியெனுமன்னவனெய்தி
ஒன்றுமாக்கையிங்குறைவதுதிண்ணமதன்றால்
துன்றுசீரறஞ்செய்வதேதுணிபெனவெகுளி
வென்றகோதமனான்மகம்விருப்பொடாங்கிழைத்தான்.

திண்ணம் - உண்மை. (ச)

ஈரைஞ்ஞூறெனுமாண்டிழைப்பேனெனும்வேள்வி
ஓரைஞ்ஞூறெனுமாண்டவனிழைத்துறைநாளில்
சீரைஞ்ஞூறொடைஞ்ஞூறுசெங்கணான்வேள்வி
பாரினான்முறைமுற்றுவித்திருந்தவன்படர்ந்தான்.

ஐஞ்ஞூறொடு ஐஞ்ஞூறுசெங்கணான்-ஆயிரங்கண்களையுடையவன், (இந்திரன்)

அரியமாதவவசிட்டன்வந்தடைந்தமையறியா
துரைசெய்வேலவனுறங்கினனுறங்கலுமுரவோன்
வருதிநீயெனவழைத்துமுன்வரவுமீங்கெண்ணான்
பொருவிலாவுடலொழிகெனவுரைத்தனன்புழுங்கி.

பொருவிலா - ஒப்பில்லாத. (சு)

உறங்கினேன்விழித்துரைத்ததுகேட்டவனுறுதல்
அறிந்திலேன்றனைச்சபித்தமெய்யருந்தவன்றானும்

இறந்துநீங்கவென்றுரைத்தனனிருவருமிறந்தார்
சிறந்தவெங்குலச்செழுந்தவன்பிறந்ததைத்தெரிக்கின்.

அருந்தவன் — அரியதவத்திணையுடையவன். (௭)

மருத்தழைந்ததார்மித்திராவருணருக்கன்பு
பொருத்துருப்பசிநிமித்தமாய்ப்பொலிந்தபொற்குடத்தில்
அருத்தியுற்றமெய்யருந்தவத்திட்பமோடடைந்தான்
உரைத்தமைத்திரவருணியென்பெயருமாங்குற்றான்.

மரு — வாசனை, அருத்தி - ஆசை. (அ)

உயிரொழிந்திடுநிமியுடற்குயிர்வரவுதவிச்
செயிரொழிந்திடுமுனிவரோடமரர்சேர்ந்தெழுப்ப
வெயிறழைந்தவேன்மன்னவன்விடுத்தவவ்வுடலம்
துயர்தழைந்திடவெடுக்கிலெனெனச்சொலித்துறந்தான்.

செயிர் - குற்றம். (௯)

நிமிபெரும்புகழ்விதேகனென்றெவர்களுநிகழ்த்த
இமைதொறுங்கலந்திருந்தனனிமையவர்வரத்தின்
அமரருந்தவராசுடல்பேணினராங்குக்
கமழுநெய்பொழிந்தம்மகமுடித்தனர்கவினை.

அமரருந்தவர் - விரும்புதற்கரியதவத்தினர். (௧௦)

உடலையந்தணருலகினுக்கரசுறவேண்டிக்
கடையவந்தனனேரிறைகடைதலிற்சனித்தாங்
கடைதலாலவனறிவுடைச்சனகனென்பெயரும்
மிடலொடும்மதனத்தினின்மேவிவந்துறலால்.

மதனத்தினில் - கடைதலில். (௧௧)

மிதிலனுமெனும்பெயருமுன்விளம்பியவிதேகன்
மதலையாகிவைதேகனென்பெயரும்வந்தியையப்
புதியமாநகரொன்றமைத்தனன்புகனகரும்
துதிசெய்மாமதிண்மிதிலையென்றுயர்ந்ததுதுதிப்பான்.

மதலை - புதல்வன். (௧௨)

சனகனீன்றசேயுதாவசுவாமவனருனும்
அநகனுநந்திவர்க்கனன்றனைமகிழ்ந்தளித்தான்
வினையிலானவன்சுகேதுவைநல்கினன்விருப்பின்
சினவுவேலவன்பெற்றனன்றேவராதனையே.

சேய் - புதல்வன். (௧௩)

அறங்கொணெஞ்சினன்றேவராதன்றருமாசன்
பிறங்குவேற்பிரகத்திரதன்றனைப்பெற்றான்

